அராவணிசடையினுனையம்பிகைபிரிந்தபோது
சராசரத்தானும்பெண்ணுந்தயவுறுகாமமின்றி
நிராசையாயிருந்ததாலேநிமலனேயெவர்க்குமேலோன்
பராபரவஸ்தவென்றுபகர்ந்தனமறைகளெல்லாம். (ருங)

அய்யனுஞ்சனகராதியருமறைச்சிறுவரானோ
உய்யமெய்ஞ்ஞானபோதமுதவியங்கிருந்தகாலை
வெய்யவெஞ்சூரன்மைந்தன்விண்ணுலகழிக்கும்போது
தையலாஞ்சசியினோடுஞ்சதமகன்றரணிசார்ந்தே. (ருச)

மேருவிற்றவஞ்செய்காலைவிமலனும்விடைமேற்றோன்றிக்
கூறுமித்தவமேதென்னகொடியவெஞ்சூரன்செய்தி
சோர்விலாதுரைத்துமிக்கதோத்திரம்பலவுஞ்சொல்லிப்
பாரிடைபபணிந்துபோற்றிபபரமனைபபார்த்துச்சொல்வான். (ருரு)

என்னையாளுடையநாதாவிறைவனேவெய்யசூரன்
றன்னையேபோக்கியெங்கடுயரினைத்தவிர்த்தியென்றே
யன்னவனுரைத்தலோடுமமலனுமிரங்கியஞ்சேல்
உன்னையேகாப்பானம்பாலுதித்திடுகுமரனென்றே. (ருசு)

அங்கவனுலேவெய்யசுராதங்கிளைகண்மாளும்
உங்களுக்கின்பமுணடாமெனறுடனுரைத்துப்போனான்
றிங்களஞ்சடையான்சொன்னசெயலினைத்தெரியவேண்டிப்
பங்கயனிடத்திலவந்தேபணிந்துதன்பரிவுசொல்வான். (ருஎ)

கஞ்சனேயெனையாளுங்கடவுளேகருணையானே
வெஞ்சினச்சூரன்மைந்தன்விண்ணுலகழித்தலாலே
யஞ்சினேனடியேனுக்கிவ்வருந்துயரகலச்சூர
னெஞ்சிடவருள்வாயென்னவிந்திரனகிதனைச்சொல்வான். (ருஅ)

நந்துயரங்களெல்லாநாரணற்குரைப்போமென்ன
விந்திரனோடெண்கண்ணனேகியவைகுண்டஞ்சார
வந்துடன்வாயிலீரொம்வரவுரைத்திடுவீரென்றார்
அந்தகல்வாயிலோருமஞ்சனவண்ணனமுன்போய். (ருக)

வேதியன்முதலாயுள்ளவிண்ணவர்யாரும்வந்து
சோதிநின்வாயிலூடுசூழ்ந்தனரென்னலோடுங்
கோதிலாக்குணத்தினானுங்கொணர்கெனவன்னோர்முன்வந்
தோதிடமுறையினேகியுற்றனர்தொழுதுநின்றார். (௬0)

தாமரைக்கண்ணினானுநதயவுடன்மகிழ்ந்துநோக்கி
மாமலரயனேயிங்குவந்ததேதுரையிங்கென்னப்
பாமகளுடனேயானும்பாலர்நால்வரையும்பார்த்துத்
தோமறப்படைக்குமிந்தத்தொழிலினைப்புரியுமென்றே

அன்னவர்நால்வரானோராதிககமிதுவோவென்று
புன்னகைபுரிந்தாரிந்தப்புனருழிலபுரியோமன்றே
முன்னவன்கயிலைநண்ணிமுதுநெறிஞானபோத
நன்னலம்வேண்டுமெனறார்நாயகனுரைப்பதானான. (௬௨)

பரைதனைப்பிரிந்துஞானம்பகருமச்செயலினாலே
யுரையிலாமோனமானொருபயிலாதுயாந்தபெம்மான்
றரையெலாமியங்கானினறசரமெல்லாமசரமான
சுரரெலாம்வெருவியோடத்துரந்தனனசூரனெனபோன. (௬௩)

அத்துயராற்றுதிங்கேயடைக்கலமாகவந்தோம்
நத்தணிகரத்தினானேநம்பெருமானேநலலோர
சித்தமதுறையுந்தேவேதேவாகடுயர்ந்தீரும
புத்திநீபுகலவேண்டுமென்றனனகமலபோதன. (௬௪)

திருமறுமார்பன்மிக்கதிசைமுகத்தவனைநோக்கி
யருளில்லாததக்கனவேள்விசகடைநதங்குறையினாலே
யிருமையுமிழந்தோமிந்தவிடரினுமிடைந்தோஞ்சூரன
பெருமையுமறிந்தோம்பின்னைப்பேசுவதினிவேறுணடோ. (௬௫)

ஆதியான்மோனமாகியாலிடையிருந்தகோலம்
பேதியாதிருக்கிலிந்தப்பிரவஞ்சநடததமாட்டோம்
வேதனேயிமவானபெறறவிமலையைவிமலனவேடப்
போதுடைவாளியானைப்போகவேயிரந்துபோககி. (௬௬)

அன்னவன்பாணமைந்துமாதியான்மீதுதூவின்
முன்னியேயிமவான்றந்தமுதல்வியைமணமுஞ்செய்தே
மின்னிகாவைவேறகந்தவேளையுமுதவுமனனோன்
றுன்னியவசுரருஞ்சூரனைக்கோறலசெயவான. (௬௭)

உலகெலாமின்பமெய்துமும்பாகடுயருந்தீரும்
நிலைபெறவுரைததோர்நீபோய்நீதியாலவேளைக்கூவி
நலமுரைத்தனுப்புமென்றானளினத்தோனுவந்துதேவர்
பலரொடும்விடைகொண்டன்னோனபதமலாபணிந்துபோனான். (௬௮)

வந்தனன்கமலத்தோனுமன்னோபதிநகரினெய்தி
யிந்திரன்முதலாந்தேவரொங்கணுஞ்சூழ்ந்துநிறப
விந்தைசேர்செலவமிக்கவேதியாபலரும்போறறச்
சுந்தரத்தவிசின்மைகித்துங்கவேடனைச்சிந்தித்தான். (௬௯)

இமையபாவதச்சருக்கமுற்றும்.

ஆ—திருவிருத்தம்—௫௬௪.

## காமதகனச்சருக்கம்.



அங்கவனினைத்தபோதிலந்தமன்மதனும்வந்தான்
யங்கயனடியிற்றாழ்ந்துபண்ணவாபதுமத்தோனே
புங்கவாகருணையோனேபுனிதனேயோதாவேதா
யிங்குநீயழைத்ததென்கொலியம்புதியென்றுசொன்னான். (௧)

கருப்புவில்லோனைநோக்கிக்கமலவேதியனுஞ்சொல்வா
னெருப்புறுவிழியினானிழலிடைமோனமாகி
யிருப்பதுதவிரவேண்டுமீசனையிறையைவெள்ளிப்
பொருப்பனைவிருப்பிலானைப்புனிதனையெய்வாயென்றான். (௨)

சொன்மொழிகேட்டுமாரன்றனைக்கையாற்செவிகள்பொத்தி
யந்நிலைசிவனையுன்னியரகராசிவசிவாயிப்
புன்மொழிபுகன்றாய்வேதாபுண்ணியனகயிலைவாச
னன்னிலையுணர்ந்துநீதானாவெடுத்துரைக்கலாமோ. (௩)

பூங்கணைமாரன்பின்னும்புகலுவானெந்தைமார்பிற்
றெங்கமலத்தாடன்னைச்சிறப்புடனிருத்திவைத்தேன்
பாங்குடன்புயத்தின்மீதும்பார்மகடன்னைவைத்தேன்
ஈங்கிதுவேறொன்றோவென்னேவுசெய்வெற்றியாமே. (௪)

வருஞ்சரோருகவுன்னாவில்வாணியைவைத்தேன்மாலாய்த்
திரும்பவுமுன்னைத்தானேதிலோத்தமைக்குருகவைத்தேன்
விரும்பியேகுருவின்மாதைவிதுவினைச்சேரவைத்தேன்
பொருந்தவே ‡ யென்றுதன்னைப்புணர்த்தினேன்சாயைதன்பால். (௫)

சதமகன்றனையிந்த்ராணிதன்னையுமன்றிமேனாள்
அதிவிரதத்தினாலேயகலிகைதன்னைமேவிப்
புதியவாயிரங்கண்மிக்கபுரத்திலுண்டாக்கிவைத்தேன்
இதுவுமென்வெற்றிதானோவில்லையோவியம்புவாயே. (௬)

சிற்பரமுணருந்தெய்வச்சிவமுனிசிந்தைவேறாய்ச்
சொற்பகராதமானைத்தொடர்ந்துபோய்க்கூடவைத்தேன்
கற்றவமுனிவரானோர்நான்செயும்வெற்றியாலே
பொற்புறுமடவார்தம்மைப்புணர்ந்தனர்புகலப்போமோ. (௭)

காசிபன்வசிட்டனோடுகருணையத்திரிததீசி
கோசிகன்றவத்துமிக்ககோதமன்கோதிலாத
தேசிகரிவர்கடம்மைச்சிந்தையைமயக்குவிக்கும்
ஆசையாற்புதல்வர்பெற்றாரதுவுமென்வெற்றியாமால். (௮)

---

‡ என்று-சூரியன்.

பாரினில் ச செய்யும்பார்த்திபர்மரபுநீங்கி
யேருறுகணிகைமாதரின்பமேறுகரவைத்தேன்
ஆர்வுறுவசியராதியானவர்யாருமேயென்
கார்முகக்கரும்பினாணை கடந்தவருலகினுண்டோ. (௯)

இவர்கள்பானீதானென்னையேவினுலிரக்கமின்றி
யவர்தமைவெறறிகொண்டுன்னடியிணையணியவைப்பேன்
புவனமோடுன்னைப்பூவைவண்ணனைப்புராதுகாக்குஞ்
சிவனைநீயெய்யென்றென்பாற்சிறுமொழிபகரலாமோ. (௰)

என்னையாளுடையநாதனிடதுபாலுமையைவைத்த
துன்னுடைவெற்றியன்றேவென்றுநீயுரைத்தியாகின்
முன்னமாதவங்கள்செய்தருமுதல்வன்பாலுறறதன்றிப்
பின்னையுன்வெற்றியென்றுபேசிடிற்பிழையதாமால். (௰௧)

பூதநாயகன்பால்யானும்பொருவிலாச்செல்வம்பெற்றேன்
ஆதலானமலன்றன்னையம்புகொண்டெய்யமாட்டேன்
வேதனேயெனக்கிவ்வார்த்தைவேதனையுண்டாம்வேண்டா
நீதியேசொன்னேனிநதநினைவைநீவிடுவாயென்றான். (௰௨)

வேறு.

அம்புயத்தவனம்பனைநோக்கியே
யும்பரோடெவ்வுலகமுழுய்யவே
தம்பமாயுனைத்தான்கயிலாயத்தி
னம்பனூரிடம்போவெனநான்சொன்னேன். (௰௩)

நீதியாய்துயர்நீங்கநினைகிலா
யாதிநாயகன்செய்தியறிவித்தாய்
ஏதியம்பினுமுன்னையல்லாலெங்க
டைதுதீர்க்குஞ்செயலுளாகாண்கிலேன். (௰௪)

என்றுகூறுமயன்முன்னியம்புவான்
றுன்றுசெஞ்சடைதனுயவன்செய்தியை
நன்றுகூறநினைகிலைநானினி
யொன்றுகூறுவன்கேட்டியென்றோதினன். (௰௫)

மாயனேமுதலாகியவானவ
ராயதேவர்களென்னைசெலுத்துவேன்
றாயனற்புதன்றென்மறைதேடிய
சேயன்முன்புநான்செல்லவுமஞ்சுவேன். (௰௬)

முன்னமுருமருமறைவேதனீ
சொன்னசொற்படிசோர்வறவெய்திநான்
என்னையாளுடையீசனையெய்யிலென்
றன்னல்வில்லுங்கணையுமெரியுமே. (௰௭)

### வேறு.

அறிவில்லவர்போலிவைசொல்லினையா
னெறியில்லவர்முப்புரநீறொழவே
சிறுபுன்னகைசெய்தெரிசெய்தவனை
வெறிகொண்மலர்மென்கணைவென்றிடுமோ. (௰௮)

நஞ்சாரமுதாநுகர்நாயகன்மே
லஞ்சாமனுமைங்கணையேவுவனே
வெஞ்சாதெழுசூறையிலேயெதிரும்
பஞ்சாயெனதாவிபறந்திடுமே. (௰௯)

முன்னாளொருநீயுமுகுந்தனுமாய்ப்
பன்னாமறைதேடுபரம்பொருளை
யுன்னாமலிகழ்ந்திடவுன்றலையை
யந்நாளிலறுத்ததறிந்திலையோ. (௨௰)

மாயன்பொருளென்றுமதித்துமையா
ளையன்கயிலாயனைநிந்தைசெயுந்
தீயன்றலைகொய்துதிரும்பியுறும்
பாய்வன்றகரின்றலைபார்த்திலையோ. (௨௧

பிலமுற்றபகாசுரனும்பெயரோன்
சலமுற்றசலந்தரனோடவுணர்
குலமுற்றுமசஞ்சலர்கொன்றிடவே
நலமுற்றுமகிழ்ந்தனைநான்முகனே. (௨௨)

சிந்தாகுலமுற்றிடுதேவரெலா
முய்ந்தோமரகரவெனவோலிடவே
மந்தாகினிதன்னைமழைத்துளிபோ
லந்தோசடைவைத்ததறிந்திலையோ. (௨௩)

மால்கொண்டிடுமால்கரிவன்புலியின்
றோல்கொண்டரைசுற்றியதூயவனை
வேல்கொண்டவிழிச்சியர்மேலெறியுங்
கோல்கொண்டெறியென்றனைகூறுவதோ. (௨௪)

பழகாமறைதேடியபண்ணவனா
ணிழலூடுறைநின்மலனெற்றிவிழித்
தழலார்பொறியொன்றதுதானலவோ
வழலாவுலகட்டதறிந்திலையோ. (௨௫)

என்னாலொருகாரியமுண்டென்வே
சொன்னாலிதமேசொலவெண்டுமலாற்
பன்னாகமணிந்தவர்பாலவிழி
தன்னாலெரியென்றனைதக்கதுவே. (௨௬)

உள்ளத்தீபவுள்ளவராயிடினு
மெள்ளத்தனையென்னுவதெண்ணிலரோல்
வெள்ளைப்பிறைசூடிவெறுத்துடனே
தள்ளப்படுவாரிதுசத்தியமே. (உஎ)

வன்பில்லவன்யானெனைவாவெனநீ
முன்பில்லதுமுன்னியெம்முன்னவனை
யென்புன்மலர்வாளிகொடெய்யெனவே
யன்பில்லவர்போனுமையாடினையே. (உஅ)

பல்லாயிரகோடிபரப்புலக
மெல்லாமுதரத்திடையீன்றருளு
நல்லாளொருபாலுறுநாயகன்மேற்
செல்லாமலர்வாளிசெலுத்துவனோ. (உகூ)

வேதஞ்சொல்லியாதனும்விண்டிலவா
ளுதன்பொருளன்றெனுநாவுமெழா
தோதுந்திறலோங்கியகையுமெழா
தேதம்பெறநின்றதுமெண்ணிலையோ. (௩௰)

வேறு.

மெய்யினுநகையினும்விழிக்குங்கண்ணினுங்
கையினுமழலுடைக்கடவுள்காரணன்
அய்யனையமலனையருகுசென்றநா
னெய்யவேயெனனுடலெரிவதுண்மையால். (௩க)

ஞலமதொழிவருமுங்களாலுய
ராலமதுண்டதுமனறியாரணச்
சீலமதுறுமறைச்சிறுவற்காகவெங்
காலனையுதைததனன்கருணைநாதனே. (௩உ)

நிருத்தனற்புதனிறைநிமலனின்மலன்
கருத்துவப்பிலரிறந்தொழிவர்கண்டனை
யுருத்திரனொருவனேயுள்ளகாரணன்
வருத்துமோவென்மலர்வாளியைநதுமே. (௩௩)

என்றுதான்வேண்மறுத்திடவுமெண்கண
னின்றுளக்கவலையானெடிதுயிர்ப்பொடு
மொன்றுமெய்யுணர்விலானுற்றுப்பின்னரு
மன்றுநன்றிவன்செயலென்றுநாடியே. (௩ச)

மற்றுநீதான்சிவன்மகிமையிவ்வணஞ்
சொற்றனையுண்மையாற்றொக்கதேவர்க
ளுற்றிடுதுயரினையொழிப்பதெண்ணிலாய்
செற்றிவகற்றியென்செய்திகேளென்றான். (௩ரு)

இப்பொழுதின்னன்வந்துற்றவித்துயர்க்
கொப்பிலாப்பரனுலகின்றதாய்தனை
மெய்ப்புறுமணமதுபுரியவேண்டுமின்
கைபபடுகணையலாற்சருமமில்லையால். (௧௬)

இயதுபேச்செயலுநம்மிறைவனீதிலான்
றயவொடுமியற்றுவதன்றித்தான்பிறி
தயலனுவகையுமோவகன்றுநீசெலுஞ்
செயலுமச்சிவன்செயறெளிநதுபாரென்றுன். (௧௭)

பொருளெனத்தம்மையேபுகழுநதேவர்கண்
மருளவோர்துரும்பினைவரதனுட்டியே
யருளினெவ்வுலகமுமமைத்தழித்தவத்
திருவுளப்பெருமைநாஞ்செப்பலாவதோ. (௧௮)

எவ்வுலகங்களுமியற்றியன்பொடு
முய்வகையுயிர்க்கெலாமுதவியேசெய்வா
னவ்வகைபுரநதபினழிததுநீக்குவான்
செவ்வியோயிதுசிவனசெயலதாகுமால். (௧௯)

இன்னமுங்கேட்டிநீயான்சொல்வாசகங்
கனனலஞ்சிலையிடைக்கணைகள்பூட்டியே
பொனமலைவில்லவன்முன்புபோகவே
முன்னமேதுவுமுண்டோமோகமாரனே. (௨௰)

ஈதலால்யாவர்களேனுந்தங்கள்பாற்
றீதுறிலுதவிநீசெய்குவாயென்று
லாதரவுறாத்திடாதருளிலார்கள்போ
லோதிடிலவனையிவ்வுலகொறுக்குமால். (௨௧)

வேறு.

முன்புவிருத்ராசுரனைமுடிக்குமுறையெண்ணி
யன்புமிகுத்தேயிநத்ரனிரக்குமதுநோக்கித்
தன்புகழ்மிக்கதானததீசிமுதுகாரு
மென்புகொடுத்தேயாவியுலநதானிசையன்றே. (௨௨)

பாலமையுடையாய்பண்ணவர்நாகப்பணிபூணுஞ்
சீலமெய்யுடையாருலகதுகாக்குஞ்செயலாலே
யோலமதுடனேவாரிதியூடேயுதித்தாரு
மாலமதுண்டார்விண்ணவரெல்லாமமுதுண்டார். (௨௩)

மீறுமுகாந்தத்தீயெனவேலைமீதோங்கிச்
சீறியவேகவெவ்விடநம்மைத்தெறுபோது
ஊறுகொடேகியொருகணமதுமுன்னுறநின்று
வாதநிறலேமேனிசிறுத்தான்மாமாலே. (௨௪)

பேராருயிராயினவர்களெனும்பிறர்தங்கட்
கோருதவியுமேசெய்திடலன்றியுறுவோர்கள்
பாரிடைதீராவெந்துயரத்திற்படுவாரொன்
றார்புகழ்கொண்டார்மேலவரறிவாரறியாயோ. (சரு)

அவுணரில்வலியோனெனவருசூரனவனாலே
புவனமுமில்லாதவனுழையேவல்புரிகினரோங்
கவலையதொழியக்குமரனையருளக்கடிதேகிச்
சிவனருகேகீயைம்படையேவச்செந்திதரோம். (சசு)

ஆகையினாலேயெங்களலக்கண்ணதுதீரப்
போகினுனக்கேசாதல்கிடைத்தாற்புகழன்றோ
மோகனவேளேவேறினியொன்றுமொழியாதே
யேகுகவையேன்றேநான்முகனன்போடிவைசொன்னான். (சஎ)

வேறு.

வேதனிவ்வகைமொழிதலுங்கருப்புவில்வேளும்
ஏதமெய்தியேயென்னையாளுடையவனிடத்திற்
காதிலைக்கணைதொடுப்பனோமற்றெவர்கண்ணும்
போதிநீயெனிலங்கவர்தமைப்பொருகுவனால். (சஅ)

என்னமன்மதனியம்பலுநான்முகத்திறைவன்
றுன்னுகோபத்தாலொருமொழிதுணுக்குறச்சொல்வான்
பின்னைநேர்சடையானெதிர்போதியோவெறுப்பாய்ச்
சொன்னசாபமேபெறுதியோசொல்லெனச்சொன்னான். (சகூ)

கொடியசாபமேமொழிகுவனென்றலுங்கோல
வடிவினானுமெய்நடுங்கினன்மதிமயக்குறவே
நெடிதுயிர்ப்பொடுமென்செய்வேனெனநின்றுதேறி
யுடனெதிர்நதுயர்கமலத்தோன்வதனம்பார்த்துரைப்பான். (ருய)

மலர்மிசைத்திசைமுகவனேகேட்டிநீவழங்கும்
பலமில்வெங்கொடுஞ்சாபத்தாறடமுியுறுவேனோ
விலகுசெஞ்சடையான்விழிக்கெதிர்நின்றுமெரிநதால்
நலமெனக்கெய்துமுய்குவனினியென்றே. (ருக)

அய்யனீயினிச்சிறிலையாதியாமமலன்
செய்யமேனியனிடத்துநான்செல்குவனென்றே
தூய்யமாமலர்வாளியான்சொல்வதுகேட்டு
வையமீன்றருள்போதனுமகிழ்ந்துரைசெய்வான். (ருஉ)

இன்பமாகவேசொல்லியெம்பணிதலைக்கொண்டே
யன்பினாலவனேகுதறுணிந்தனையதனாற்
றுன்பநீங்கினோந்துணைவனேகயிலையிற்றூயோன்
முன்புசெல்கநீயாங்களுமுதல்வன்முன்வருவோம். (ருங)

வேறு.

ஆதரவுரைத்துப்பின்னுமவனுடனுரைப்பாள்யாமும்
வேதனையுற்றோந்தேவர்மிகுதுயரறிந்தாயையா
காதனையுவப்பினோடுநலம்பெறுகவுரிதன்பாற்
காதலிக்கமேவுமாறுகடிதுநீபோவாயென்றான். (௫௪)

போக்கலுங்கரங்கள்கூப்பிப்பூவினுனுலகநீங்கிக்
காக்குநதன்புரத்தைமேவிக்காதலிக்கிதனைச்சொல்லித்
தேக்குநலலறிவினாலேதெளிநதொருப்படுத்தித்தேனார்
உளக்கரீள்வாளித்தூணியுடனுடைவாளுஞ்சேர்த்தான். (௫௫)

கன்னல்விற்காமர்காண்டங்கவின்றொளிர்வானவில்லைத்
தன்மணிக்கரத்திலேநதித்தண்மதிக்குடைமீதோங்கத்
துன்னுகோகுலக்காளங்கள்சூழ்கடன்முரசமார்ப்பத்
தென்மலைச்சிறுதேரேறித்திகழமீனக்கொடியுமோங்க. (௫௬)

இரதிதன்னோடுமனபாயிருநதவப்பதியைநீங்கி
விரவியகுறிகள்வெய்யவளவையின்மிகுநதுதோன்றப்
புரமெரிசெய்தநாதன்பொன்றொளிர்மேருவில்லான்
கருணையங்கடவுள்வாழுங்கயிலைமால்வரையைச்சார்ந்தான். (௫௭)

வெள்ளிமால்வரையைக்கண்டுவிரவிளந்தேரினின்றோன்
பொள்ளெனவிறங்கிச்சூழ்நதபுகழ்பரிசனத்தைநீங்கி
வள்ளமென்முலையாள்கூடவரமலர்வாளியேந்தி
யொள்ளரிமுழையிலும்பலுறுவபோலுள்ளேபோந்தான். (௫௮)

அத்தனார்கயிலையெய்தியங்கைவில்வளையவாங்கிக்
கொத்தருமபைந்தும்பூட்டிக்குலவுபுள்விலங்கின்மீதே
சித்தசன்விடுத்தபோதிறசிநதனைவிரும்பிக்கூடும்
அத்தகைபுரிநதிடாமலரற்புறுவகையுங்கண்டான். (௫௯)

புண்ணியன்கயிலைவாசன்பூவையைப்பிரிதலாலே
யெண்ணில்பல்கோடியண்டத்திடைசராசரங்களெல்லாம்
உண்ணிறைவிருப்பமின்றியூடல்கூடலுமேயின்றி
நண்ணியதென்கைவாளிநம்பன்மேலுறுமோவென்றான் (௬௰)

இன்னணமாரவேணின்றிரங்குமவ்வேலைதன்னிற்
கன்னியோர்பாகன்பாதங்கருத்துறவிருத்துநந்தி
யின்னவனில்லைகண்டேயார்கொலேயிவனென்றெண்ணிப்
பின்னதுதேர்நதேயீசன்பேசியவேளாமென்றே. (௬௧)

இருக்குமந்நநதிகேசனிருந்திறன்மதனைநோக்கக்
கருத்துடனுடலுமஞ்சிக்கன்னலஞ்சிலையுமேந்தி
முருக்கிதழிரதியோடுமோகமன்மதவேளன்பாய்ப்
பொருக்கெனநடந்தேயன்னோன்பொன்னடிபணிந்துநின்றே. (௬௨)

பேருரோமமியாவர்களேனும்பிறாதக்கட்
கோருசவியுமேசெய்திடலன்றியுறுவோர்கள்
பாரிடைதீராவெந்துயரத்திற்படுவாரொன்
ருர்புகழ்கொண்டார்மேலவரறிவாரறியாயோ. (சரு)

அவுணரில்வலியோனெனவருசூரனவனாலே
புவனமுமில்லாதவனுழையேவல்புரிகினரேங்
கவலையதொழியக்குமரனையருளக்கடிதேகிச்
சிவனருகேநீயைம்படையேவச்சிந்திததோம். (சசா)

ஆகையினாலேயெங்களலக்கண்ணதுதீரப்
போகினுனக்கேசாதல்கிடைத்தாற்புகழன்றோ
மோகனவேளேவேறினியொன்றுமொழியாதே
யேகுவையென்றேநான்முகனன்போடிவைசொன்னான். (சஎ)

வேறு.

வேதனிவ்வகைமொழிதலுங்கருப்புவில்வேளும்
ஏதமேய்தியேயென்னையாளுடையவனிடத்திற்
காதியைங்கணைதொடிப்பனோமறறெவர்கணனும்
போதிநீயெனிலங்கவர்தமைப்பொருதுவனால். (சஅ)

என்னமன்மதனியம்பலுநான்முகததிறைவன்
றுன்னுகோபத்தாலொருமொழிதுணுக்குறசசொல்வான்
பின்னைநோசடையா'னதிரபோதியோவெறுப்பாயச்
சொன்னசாபமேபெறுதியோசொல்லெனச்சொன்னான். (சக)

கொடியசாபமேமொழிகுவனென்றலுங்கோல
வடிவினானுமெய்நடுங்கினன்மதிமயக்குறவே
நெடிதுயிர்ப்பொடுமென்செய்வேனெனநின்றுதேறி
யுடனெதிர்நதுயர்கமலத்தோனவதனம்பார்த்துரைபபான. (ருய)

மலர்மிசைத்திசைமுகவனேகேட்டிநீவழங்கும்
பலமில்வெங்கொடுஞ்சாபத்தாறடிழியுறுவேனோ
விலகுசெஞ்சடையான்விழிக்கெதிர்நின்றுமெரிநதால்
நலமெனக்கெயதுமுயகுவனினியென்றே. (ருக)

அய்யனீயினிச்சிறலையாதியாமமலன்
செய்யமேனியனிடத்துநான்செல்குவனென்றே
தூய்யமாமலர்வானியான்சொல்வதுகேட்டு
வையமீன்றருள்போதனுமகிழ்ந்துரைசெய்வான். (ருஉ)

இன்பமாகவேசெல்லியெம்பணிதலைக்கொண்டே
யன்பினாலவனேகுதறுணிந்தனையதனாற்
றுன்பநீங்கினோந்துணைவனேகயிலையிற்றூயோன்
முன்புசெல்கநீயாங்களுமுதல்வன்முன்வருவோம். (ருந)

வேறு.

ஆதரவுரைத்துப்பின்னுமவனுடனுரைப்பானியாமும்
வேதனையுறமேருநதேவாமிகுதுயரறிநதானையயா
நாதனையுவப்பிலேனுடநலம்பெறுகவுரிதனபா்ற
காதலிகூமெவுமாறுகடிதுநீபோவாயென்முன். (௫௪)

போக்கலுங்கரங்கள்கூபபிப்பூவினனுலகநீங்கிக்
காங்குநதன்புரத்தைமேவிக்காதலிக்கிதனைச்சொல்லித்
தேக்குநலலறிவினாலெதெளிநதொருப்படுத்தித்தேனார்
உளக்கநீள்வாளித்தூணியுடனுடைவாளுஞ்சேர்த்தான். (௫௫)

கன்னல்விறகாமா்காண்டங்கவின்னுளிர்வானவில்லைத்
தன்மணிக்கரததிலேநதிததண்மதிக்குடைமீதோங்கத்
துன்னுகோகுலக்காளங்கள்சூழுகடனமுரசமார்ப்பத்
தெனமலைசிறுதேரேறிததிகழமீனக்கொடியுமோங்க. (௫௬)

இரதிதனனேடுமனபாயிருநதவப்பதியைநீங்கி
விரவியகுறிகள்வெயயவளவையினமிகுநதுதோன்றப்
புரமெரிசெயதநாதன்பொன்னுளிர்மேருவில்லான்
கருணையஙகடவுள்வாழுங்கயிலைமால்வரையைச்சார்நதான். (௫௭)

வெள்ளிமாலவரையைக்கண்டுவிரவிளநதேரினின்றேன்
பொளளெனவிறஙகிச்சூழ்நதபுகழ்பரிசனததைநீங்கி
வள்ளமெனமுலையாள்கூடவரமலாவாளியேநதி
யொள்ளரிமுழைபிதும்பலுறுவபோலுள்ளேபோநதான். (௫௮)

அத்தனார்கயிலையெய்தியங்கைவில்வளையவாங்கிக்
கொத்தருமலைநதும்பூட்டிக்குலவுபுள்விலங்கினமீதே
சிததசன்விடுததபோதிறசிநதனைவிரும்பிககூடும்
அததகைபுரிநதிடாமலரறவுறுவகையுங்கணடான். (௫௯)

புண்ணியன்கயிலைவாசன்பூவையைப்பிரிதலாலே
யெண்ணிலபலகோடியணடததிடைசராசரங்களெல்லாம்
உண்ணிறைவிருப்பமினறியூடலகூடலுமேயின்றி
நண்ணியதெனகைவாளிநம்பன்மேலுறுமோவென்றான் (௬௦)

இன்னணமாரவேணின்றிரங்கமவவேலைதன்னிற
கன்னியோர்பாக... ...றவிருத்துநநதி
யின்னவனிலைடை ...லேயிவனென்றெண்ணிப்
பின்னதுதோநடே ...ாமென்றே. (௬௧)

இருக்குமநநநதி... ...கணைநோக்கக்
கருத்துடனுடனு... ...லையுமேநதி
முருக்கிதழிரதி... ...வேளனபாய்ப்
பொருக்கெனநட... ...ான்னடிபணிந்துநின்றே. (௬௨)

நந்திநாயகனேயெங்கணாதனார்கயிலைமீதின்
மந்திரவாயில்காக்கும்வரதனேமழுவலானே
சுந்தரப்பிரம்பினானேதூயனேகருணையானே
யிந்திரன்முதலோர்போற்றுமிறைவனேபோற்றிபோற்றி. (௬௩)

என்றுதோத்திரஞ்செய்வேளையினிதுடன்பார்த்துநோக்கி
நன்றுநீவந்ததென்கொலென்னலுநடந்தசெய்தி
யொன்றிலாதுரைத்தலோடுமுணர்ந்தனனந்திகேசன்
கொன்றையஞ்சடையினான்முன்கூறியகுறிப்புமீதே. (௬௪)

பாலலோசனர்வேள்விக்குப்பசுப்படுத்தெழுப்புமாபோல்
வாலையாமளைகல்யாணமணம்புரிந்திடுவேள்விக்குச்
சீலமன்மதனைவீட்டித்திரும்பவுமெழுப்பச்செய்வார்
மாலயன்முதலாந்தேவர்வருத்தமுந்தீருமென்றே. (௬௫)

தேவர்களிடுக்கணெல்லாந்தீரவந்தனையோவென்று
காவலனந்திகூறக்காமவேள்வணங்கிச்சொல்வான்
பூவகைவாளியேவிப்புனிதர்கட்பொறியினாலே
சாவதுசரதமென்னைத்தடாதருள்புரிவாயென்றான். (௬௬)

மனநினைவிதுவென்மேலைவாயிலோடேகென்றோதப்
புனையிழையிரதியோடும்பொள்ளெனவணங்கிப்போனா
னினையவுமரிதாயாலநிழலிடையிருக்குமெங்கோன்
றனையெதிர்கண்டானகந்தளர்ந்தனன்றரையில்வீழ்ந்தான். (௬௭)

கருமுகிலுதவுகாளைகலங்கியேவிழுந்தபோது
பெருநிலமகளையங்கண்பெட்பறத்தழுவுவானை
மருமமும்புயமுங்கையும்வதனமுந்துடிப்பிலானை
யுருமொலித்திடவேகேட்டவுரகம்போலுயிர்ப்பிலானை. (௬௮)

கண்டனளிரதிகாணுங்கணவனைக்கரங்கண்மீதே
கொண்டுதன்மடிமேல்வைத்துக்கோலமெய்வெயர்வுமாற்றிப்
பண்டுளவிதியேயிங்ஙன்பரமனையெய்யவந்த
திண்டிறலிதுவோவென்றுதியங்கியேதேற்றஞ்செய்தாள். (௬௯)

உணர்வுவந்துற்றபோதிலுளத்திடைநினைந்துநைவான்
பணவரவணிந்தநாதன்பண்டுபுன்னகையினாலோர்
கணமதிற்புரங்கள்காய்ந்தகடவுளைப்பொருபோவென்று
மணமலரயனார்சொல்லவந்ததும்வரதன்முன்னே. (௭௰)

இறுதியெய்திடவேவந்தேனினியிதுக்கேதுசெய்வேன்
குறுகிமுன்வந்தேயிந்தக்குழகனைக்கண்டபோதி
லறிவுட்டானவிகாணேனைங்கணைக்கூற்றமுண்டோ
வுறுசெயலிதனையும்பரறிகிலருரைத்தாரன்றே. (௭௧)

அண்டகோடியுமுண்டாக்கியழித்திடுமுதல்வன்றன்னைக்
கொண்டமென்பூவாலெய்யக்கூடுமோநகையிதன்றே
பண்டியான்பிருகுசெய்தபாதகப்பயனாலிங்ஙன்
முண்டகப்பிரமனேவவந்தனன்முடிவேனென்றான். (எ௨)

ஆதியிலெனக்குமன்மதாதிக்கமிரதியோடு
நீதியாலுதவிக்காத்தநிமலனூர்முன்புநின்று
காதல்செய்விப்பேன்போலக்கருப்புவில்வளையவாங்கிப்
போதுகொண்டெய்வேனிந்தப்புன்மையெனச்சொல்லுவேனே. (எ௩)

இவ்வண்ணமாரவேளுமினையனபுலம்பியெண்ணி
மெய்வண்ணவிரதியோடுமெல்லவேயொல்கியொல்கி
மைவண்ணக்கண்டனமுன்னோர்மருங்குறவந்துநின்று
கைவண்ணச்சிலையைவாங்கிக்கணையதிற்பூட்டிநின்றான். (எ௪)

சுந்தரவேளிவ்வாறுதுணிந்துமுன்னிற்கும்போதி
லிந்திரன்வேதனார்தம்மிணையடியிறைஞ்சிநோக்கிக்
கந்தரங்கறுத்தநாதன்கயிலையிற்சென்றகாமன
சிந்தனையறியயாமுஞ்செல்லுவோமென்றுசொன்னான். (எ௫)

வேதனும்விரும்பியன்பாய்விண்ணவர்குழாங்கள்சூழ
வாதியானகயிலையெய்தியங்கணோர்மருங்குநின்றான்
காதல்செய்விக்கவந்தகாமவேள்கணையாமைந்து
போதுகொண்டெய்தல்காணப்பூவையும்பின்னேநின்றாள். (எ௬)

ஆரவேமுன்புதானின்றான்றொழிலதுவிடாமற்
சூரமோடெரியத்தானேதுணிந்துநெஞ்சுறைத்துத்தேறிக்
கார்மலிகண்டன்மீதுகருப்புவில்லெதிரேவாங்கி
மாரவேள்வாளியைந்துமார்புறத்தொடுத்துவிட்டான். (எஎ)

எய்திடுவாளியைந்துமென்னையாளுடையநாதன்
மெய்யுறப்படாமுனெற்றிவிழிகொடுசற்றேபார்த்தா
னெய்தெனவெந்துநீறுநுண்பொடியானான்வேளுந்
துய்யநற்கயிலையெல்லாஞ்சூழ்புகைபரந்ததன்றே. (எஅ)

ஆயதோர்புகையின்மாலையழலொடுந்தாவக்கீழ்பால்
வாயிலினிருந்தநந்திவரும்புகையதனைநோக்கித்
தீயவெம்பகழிமாரன்சிலையொடுமெரிந்தானென்று
நேயமோடிருந்தோர்க்கோதிநெறியுடன்சிறிதுசொல்வான். (எகூ)

சிந்தையினறிவுமிக்கீர்செய்தியான்சொல்வன்கேண்மின்
சந்த்ரசேகரனார்செய்யதழல்விழியெரித்ததன்று
வித்தமன்மதனுமெங்களீசனையெய்வேனென்று
வந்தவத்துணிவுத்தேவனைத்துடன்சுட்டதாமால். (அ௰)

எண்ணுவதினிவேறில்லையிரதிதன்கொழுநற்காக
கண்ணியேமனஞ்சோராமனுதனையிரந்தாளானாற்
புண்ணியப்பொருளாயுள்ளோன்புகழ்பெறுகருணையாலே
திண்ணியமதனையன்பாய்த்திரும்பவுமுதவச்செய்வான. (௮௧)

இன்னணமிறைவன்செய்கையியம்பலுநந்திகேசன்
அன்னவன்றன்னைச்சூழுமந்தநற்கணத்தோரெல்லாந
தன்னுபல்லண்டமெலலாநதோன்றலாலுயயுமெனறே
பொன்னிகர்சடையினானைப்புகழ்ந்தனர்போற்றியார்த்தார. (௮௨)

குரகதக்கிள்ளைமாரன்கொடியவல்வினையானமுகக
ணரனையெய்தெரிநதானல்லாலவனொடுங்கூடநின்ற
விரதியையெரித்தானில்லையெரிநதிடாமூவர்நிறபப
புரமதுதகனஞ்செய்தபுண்ணியப்புனிதமூர்த்தி. (௮௩)

வேறு.

பொன்னுதன்மீதுறுபொறிக்கட்பார்வையா
லின்னணமாரவேளெரிநதுபோகவும்
பின்னருமுன்னுறுபெற்றிமேவியே
யந்நிலைமோனமதாகிவைகினன. (௮௪)

எரிந்திடுகணவனையிரதிநோக்கினள்
கரிந்துடல்சாம்பலாங்கரியில்வீழ்நதனன்
பொரிந்தனளுள்ளினள்பொருமிக்கண்கணீர்
சொரிந்தனள்பதறினடுணுக்குற்றேங்கினள். (௮௫)

தலையினின்மார்பினிறநடக்கைதாக்கினள்
முலையினிலணிகலன்முழுதும்போக்கினள்
கலைபிரிமானெனக்கலங்கிக்கம்மிய
ருலையிடுமெழுகெனவுருகிவாடினள். (௮௬)

அழுவள்பின்னிரங்குவளலறிநெஞ்சழன்
றெழுவண்மெய்பதறுவளிறப்பிதோவென
விழுவணெட்டுயிர்ப்பொடும்விம்முவாளெரிக்
குழுவிடையுற்றதோர்குயிலுமாயினள். (௮௭)

சாம்பலாமேனியைத்தடவிப்பார்த்தன
ளாம்பலவிடங்களுமவனைக்காண்கிலா
டேம்பினள்வெதும்பினடியங்கினள்சினப்
பாம்பின்வாய்த்தேரைபோற்பதறிச்சோருவாள். (௮௮)

வேறு.

இன்னற்பிரிவாலிரங்கிமிகவேயரற்றிப்
பின்னற்குழலிரதிப்பெண்ணமுதப்பேரழகி
தன்னைப்பிரிந்ததலைவனைத்தன்னாருயிரைக்
கன்னற்சிலையானைக்காணாள்கருத்தழிந்தாள். (௮௯)

ஒருமானிடத்தானுனையெரித்தசாம்பலதி
னருகாவிருந்தேயழுதகுரலோசையெல்லாந்
திருமான்மகனேதிறலோனேசெய்யோனே
கருமாலுருவெடுத்தோன்கண்மணியேகேளாயோ. (௧௨)

தண்ணார்மதிக்குடையாய்சம்பரனைக்காய்ந்தோனே
கண்ணாரழலாலெரிந்ததுகரியாயினையே
பண்ணோருமிந்திரனும்பங்கயனுமாலோனும்
விண்ணோருந்தேவியரைமேவிவிழிதுஞ்சுவரால். (௧௩)

முப்புரத்தைக்காய்ந்தவர்தம்முன்புபோகாதேயென்
றப்பொழுதேசொன்னேனதுவுமறிந்தாயிலையே
மெய்ப்புடனேவிண்ணோர்விளம்புவதுகேட்டுவந்தே
யிப்பொழுதெங்கேயொளித்தாயென்னாருயிர்க்குயிரே: (௧௪)

முன்னமமரர்குழாமொய்ப்பமணம்புரிந்த
மன்னவனேயென்னைமறவேனெனவுரைத்தாய்
கன்னன்மதனேயுனகட்டழகைக்காணும
லின்னமுயிர்வைத்திருந்தேனிருந்தேனே: (௧௫)

சம்பரமாசெய்தியறியாரோநான்முகத்தோ
னும்பருறுதுயரந்தீர்வாரொனவுரைத்தே
செம்பதுமைபெற்றசிறுவாமணங்குலவு
மம்பதனாலெய்யென்றனுப்பவுயிர்மாண்டனையே: (௧௬)

கைகாணேனேந்துங்கருப்புச்சிலைகாணேன்
மெய்காணேன்சென்னிவிளங்குமுடிகாணே
னெய்கணையுங்காணேனிசைக்குங்குயில்காணேன்
செய்வகையுங்காணேனெனசெய்வேனசிறியேனே: (௧௭)

வேறு-

சீர்மேவுமுயர்ந்தசெல்வமிழந்தாலுமுயிரிழக்கச்செய்வாருண்டோ
பார்மேலோவிண்மேலோபங்கயத்திலிருந்தகொடும்பாவிமேலோ
போர்மேற்கொண்டிங்குவந்தநின்மேலோயிறந்தனைவெண்பொடியாய்ப்போன
தார்மேலிப்பழிசுமக்குமறிகிலேனொருசிறியேனறிகிலேனே- (௧௮)

வானவர்கண்முடிந்தனரோமலர்மேலான்முடிந்தனனோமற்றும்வெவ்வே
றானவர்கண்முடிந்தனரோவச்சிரத்தான்முடிந்தனனோவதுவுங்காணேன்
ஞானநெறிமுழுதுமுயர்நான்முகத்தோன்சிறுவருக்குநால்குமீசன்
மோனநிலைதவிர்க்கவந்துமுடிந்தனையேயுன்னுடனேமுடிந்ததாரே- (௧௯)

முன்னுடையவினையிதுவோமுகிலுடையபலப்பேறேமுதிர்பாலாழிப்
பொன்னுடையபொன்னேமென்பூவுடையகண்மணியேபொருவிலானே
யுன்னுடலம்பொடிபடுத்துமொருமுந்தல்வனுதல்விழியொழுஞ்செந்தீ
யென்னுடலம்பொடிப்படுத்தாதிருந்தாலுமிருப்பேனோவேனையேனே- (௨௰)

தேவென்றபேர்க்கடைவோசெயதான்றிமறந்தவர்தாஞ்சிறந்தாருண்டோ
காவென்றுசொல்லியக்தக்கமலத்தோன்கோடீரக்கமலத்தோன்பாற்
போவென்றுனிப்போதுபொடியாகிக்கிடந்ததனைபோகக்கோலத்தோடும்
வாவென்றுவில்லையிங்குவந்தாலுமில்லையவன்வலிபுமீதே- (௨௯)

தன்போசொல்லவுந்தொலையாதறிவுடையதுயோர்க்குத்துயர்செய்தேனோ
வென்போலுமடவாருக்கிரங்காமற்கொடியவினையெதுசெய்தேனோ
வுன்போலுமழகுடையாருலகிலொருபுருடருண்டோவுண்டோவென்றே
மின்போலுநுடங்குமிடைவேல்போலும்விழியிரதிவெதும்பிச்சோர்ந்தாள்- (௩௰)

வெறிமலர்மேலிருப்போனும்விண்ணவருமிந்திரனும்விடைவலான்முன்
பிரிபமுடன்விடுத்தார்கணீபிறந்தாயவாகளுன்னைப்பிழைப்பித்தாரோ
வறிதுயிலவானுன்றுதைவலியனென்பாரவனுமுன்பாடறிந்திலானோ
விறுதிபடவுன்றலைமேலெழுததிருந்தாலவர்களெலாமென்செய்வாரோ. (௩௧)

நெடுமாலைப்பங்கையனைவிண்ணவனைமற்றோரைநினைந்துநீதான்
விடுவாளியானமருட்டிவென்றனையேயதுபோலவிடைவலான்மேல்
அடுவாளிதுரந்துடலமழிந்தனையேயென்கணவாவரசேநீதான்
படுதீயிலகப்படவுமபாரத்திருந்தேனயலார்போறபதைக்கின்றேனே- (௩௨)

பூங்காவினிடைப்புகுந்துபுதுமலர்கொய்திருவோரும்புனைந்துவாசக்
கோங்காருங்களபமுலைக்கொடிப்படைகள்புடைசூழக்குயிலுங்கூவப்
பாங்காகவசந்தன்விழாக்கொண்டாடிப்பஞ்சணைமேற்பள்ளிகொண்டே
நீங்காமற்கூடிவிளையாடினதும்பொயதானோநினைந்திடாயே- (௩௩)

சொன்னாவிற்கலைமகளுந்திருமகளும்புவிமகளுந்துயவானின்
மின்னாருந்தருமகளுந்தங்கள்பதியொடுமிருந்துவிரும்பிப்பூட்டும்
பொன்னாருமங்கலநாண்புனைந்திருப்பவினைந்துருகிப்புலம்புவேனோ
மன்னாநானுன்னோடும்வருகின்றேனெனப்பொருமிவருந்துகின்றாள்- (௩௪)

காமதகனச்சருக்கமுற்றும.

ஆக- திருவிருத்தம். ௬௯௮.

## மோனநீங்குசருக்கம்.

இந்தவாறுதானிரதியும்வருந்திடவிறையோன்
முந்தமேவியமோனமோடிருப்பதுமோகன்
கந்தவாளியோடெரிந்ததுங்கண்டனரயன்மா
லந்தரத்துறைதேவருங்கலங்கிநெஞ்சழிந்தார். (௧)

இரங்குவார்விழுவாரெழுவாரழுவார்கள்
அரங்குவாராக்காமெனவுள்ளமுமயர்வார்
சிரங்குவார்கணீர்சிந்துவார்சிரத்தொடும்வயிற்றிற்
றரங்களாரவேயெற்றுவார்கலங்குவார்கவல்வார். (௨)

மங்கைபாகனையெய்யெனமாரனைவிடுத்தோம்
அங்கவன்செலப்பொடித்தனன்மோனமாயிருந்தான்
றங்குபொன்னுலகிழந்தனமிப்படிதளர்ந்தெம்
இங்கிதற்கினியென்செய்வோமையகோவென்றார். (௩)

மலர்த்தொடெய்திடுமாரனைக்காய்ந்தனன்வரதன்
அலகிலாற்றலைப்புணர்ப்பினாலாறுவதரிதாங்
குலவுமித்துயர்தீரவுநாமினிக்கூடிப்
பலருமார்ப்பொடுமெதுவோமெனநனிபகர்ந்தார். (௪)

கஞ்சனேமுதலாகியகடவுளரெவரும்
நஞ்சமாரகளத்திறையவன்கயிலையினுப்ப
ணிஞ்சிசூழ்நகர்க்கோபுரவாயிலினெய்தி
மிஞ்சுதோத்திரம்பலபலவிளம்பினரார்த்தார். (௫)

கங்கைசூடியுங்கடல்விடமருந்தியுங்கனன்று
பொங்குதீமழுவேந்தியும்புரமெரிசெய்தந
துங்கவெவ்வலிப்பகைஞரைத்துரந்துடன்றொலைத்தும்
எங்களைப்புரந்தாய்முனமினமும்புரப்பாய். (௬)

அன்பர்செய்பிழையடிகளேபொறுப்பதல்லாமன்
முன்புதானெவரெங்களைப்புரந்ததுமொழியாய்
வன்புமிக்கவெஞ்சூரனானமனவலியிழந்தோம்
இன்பமற்றுளோந்துன்பசாகரத்திடையிடைந்தோம். (௭)

நாளுமிப்படிநலிவதோவருணலமிலையோ
மாளுமவ்வகைவந்துறுதுயரமுமாற்றிக்
கோள்கடிந்தினியெங்கண்மேற்குறைவிளையாமல்
ஆளுமன்புசெய்யமலனேயஞ்சலென்றருள்வாய். (௮)

மாதுநீங்குழியோகியல்காட்டிடும்வகையப்
போதனக்கொருகணமெனப்புகலுமப்போதே
யோதிலெங்களுக்குகம்பலசென்றதாலுய்யா
தேதமுற்றுமெய்வருந்தினேமிறைவனேயென்றார். (௯)

மாயவன்முதலோரருச்சித்தனைவணங்கி
யேயமெய்த்திருப்பெற்றனமிறைவனேயிறப்போ
டாயதோற்றமதின்றியேயைந்தொழிலியற்றுந்
தூயனேயினியருள்செய்வாயெங்கணற்றுணையே. (௰)

அய்யனேமலைமகளைநீமணம்புரிந்தருள
வெய்யும்வேளைமுன்னனுப்பினேமிருளுடைமனத்தே
மையலாலையுமெரித்தனைமவுனமாயிருந்தா
யுய்யுமாறினியெங்களுக்குதவிசெய்தருளே. (௰௧)

உறுவயப்புலிமதமலையுரித்ததடரிததாய்
சிறுவிதிச்சிறியொண்புரிவேள்வியுஞ்சிதைத்தாய்
மறிமழுப்படைதரித்தனையஃதெனவலிய
கறுவுடைக்கொடுஞ்சூரனைக்காயாதெமைக்காப்பாய். (௰௨)

பங்கயன்முதலோர்களும்பருவரலுற்றே
யங்கணிவ்வகையேத்தியேயுரைத்திடுமளவிற்
றுங்கவல்வினைநீங்குறுகாலமுந்தொடர
வெங்கணந்தியைநினைந்தனனருளுடையிறைவன். (௰௩)

அமலனந்தியைநினைத்தலுமங்கவனறிந்தே
நிமலன்முனபுவந்தடியிணைபணிந்தெதிர்நின்றான்
கமலவேதியனமுதலவாயாரையுங்கடிதிங்
கெமதுமுன்புகீகொணர்கென்வாயிலினையதி. (௰௪)

வந்துமுன்னின்றநந்தியைமலருறைவோனும்
இந்திரன்முதலிமையவர்யாவருமிறைஞ்சச்
சந்த்ரசேகரனுங்களைத்தருகெனவுரைத்தான்
புந்தியார்துயர்நீங்கியேபோதுமினெனறான. (௰௫)

மிக்கநந்திதானிவ்வகைவிளம்பியமாற்றம்
புக்கவாரமுதாகவேசெவிதொறும்புகுந்த
தொக்கவேதனுமமரருமார்த்தனர்துதித்தார்
முக்கணாயகன்புகழ்நினைந்தாடினார்முனிவோர். (௰௬)

அளவிலின்பமேபெற்றிடுமயன்முதல்யாரும்
உளமகிழ்ந்தரகரவென்றுதொடர்ந்துவந்துறவே
களமிருண்டவன்முன்னொருகணத்திடைவிடுத்தான்
வளமைதங்குபேரறிவுடைநந்திமாதவத்தோன். (௰௭)

வேறு.

மலர்மிசையிருந்தவேதன்வாசவனமரர்யாரும்
நலமுறுமன்போடேகிநாதனைவந்துகண்டார்
அலகிலாப்புவனகோடியண்டங்கள்பலவுந்தந்த
நிலவுலாம்பவளவேணிநிமலனேபோற்றிபோற்றி (௰௮)

என்றிருகரங்கள்கூப்பியிறைவனேயிணையிலானே
துன்றுசெஞ்சடையினானேதூயனேசோதியானே
யுன்றொருபாலற்காய்ப்பாலாழியைநல்குநதேவே
நின்றிருவருள்செய்தெம்மைநிலைபெறச்செய்யவேணடும். (௰௯)

ஆனதோருகங்கள்சென்றதளப்பிலவின்னஞ்சூரன்
றானரசாளத்துன்பசாகரத்திடையேவீழ்ந்தோம்
யோனமோடிருந்தாய்நீயுமுறைசெய்தாலெம்மைக்காப்பார்
தேனமர்கொன்றையானேதிருவுளமிரங்கவேண்டும். (௨௰)

அடல்வலிமிகுத்தசூரனுவியைநீக்கவெங்கள்
இடர்தொலைத்திடவோர்சேயையின்பமாயருளவேண்டுந்
தடவரையிமையமீதுதவம்புரிகவுரிதன்னைக்
கடகரியுரித்தநாதாகடிமணஞ்செயவும்வேண்டும். (௨௧)

இவ்வகைமொழியுநதேவர்க்கிரங்கியெம்மிறைவன்சொல்வான்
அவ்வகையுங்கட்காகவாநதநல்வரையிலெய்திச்
செவ்வியகருணையாளைத்திருமணஞ்செய்வோநீங்கள்
கௌவையையொழிநதேயிக்ககணகவெறபிடைபோமென்றான். (௨௨)

அரனிதுகூறக்கேட்டவயன்முதலமரரெல்லாம்
பரவினர்விடைகொண்டேகிப்பரிவுடனபோயபின்னர்
இரதியங்கெய்தியெங்கோனிணையடிமீதுதாழ்நது
கருணையங்கடலேகாளகண்டனேகடவுளானே. (௨௩)

செய்யனேயரனேதேவதேவனேதிகம்பராவென்
னய்யனேயழிவிலானேயயனொடுமமரரெல்லாங்
கையுறுவாளியாலென்கணவனையுன்பாலேகி
மையல்செய்விபபாயெனறூர்வாநதிவணெரிநதிட்டானே. (௨௪)

சரபம்வெங்கோபங்கொண்டாறறுவுகோளரியைக்கொல்லுங்
கரவுறுமுலங்கைக்கொல்லக்கருதுமோகருதாதனறே
விரவுறுகரும்பும்பூவும்வில்லொடுகணையாயேந்தி
யிரவுறுகாமவேளோவெரிவிழிககிலக்கதாவான். (௨௫)

சிறுமையோனறிவிலாதேசெய்பிழைபொறுத்தேயாள்வாய்
மறிகரத்துடையதேவேவரதனேயெரிநதோன்றன்னைக்
கிறுபையோடருளவேண்டுமெனறவள்கிளத்தலோடு
முறுவல்செய்தமுதமபோலோர்மொழியினைப்பகர்தலுற்றான். (௨௬)

பூங்குழலிரதிநீதான்புலம்பலையிமையமீதில்
ஓங்குநற்றவஞ்செய்கின்றவுமையினைமணஞ்செய்போதில்
ஆங்குநின்கணவன்றன்னையழைத்துனக்கருள்வோமங்கே
பாங்குடன்முன்னேசெலவாயென்னலும்பணிநதுபோனாள். (௨௭)

எழிலுடையிரதிதானுமிமையமால்வரையினெய்தி
மழவிடையவன்றானன்பாய்வருவனென்றிருநதாளிப்பாற்
குழூதகையுடையதேவர்துயரமதொழியவேதம்
பழகியசரணன்ஞானப்பரைமணம்புரியவெண்ணி. (௨௮)

வேறு.

சனகர்சனந்தனர்சநாதனரினியசனக்குமார்தம்மைநோக்கி
யனகனருளொடுபுகல்வானரு்மறைநூற்பொருளுரைக்குமதுயோகன்றே
நினையவுமோவரியதுவாயகரவுமோவரியதுசன்னெறிசேர்ஞான
மெனினினையுமனத்தினிடையிரவுபகன்மௌனமொடிருப்பீரென்றான். (௨௯

அத்தனுமாப்படிஞானமோனமுடனிருந்தசனகாதியொரு
முத்திநிலைவழிதேர்ந்தபேரறிவுதோன்றவருண்முழுதுந்தோன்றிச்
சித்தமுவந்தன்பொடுமெச்சிவனடியையவர்தினைகள்செய்தேயாங்க
ளித்தகைமெய்யறிவினுண்மருணீங்கியுய்ந்தனமென்றினிதுபோற்ற. (௯௰)

இந்நிலைமைவந்ததிருஞானமோனத்தையினியிடைவிடாம
லந்நிலைநிட்டையினிலிருந்தம்பெரும்பூதமும்புகுதாதழியாவீடா
மின்னுறுநம்பதமடைவீரேகுமெனத்தொழுதிறைஞ்சிவிடைகொண்டன்பாய்
மன்னியநான்மறைச்சிறுவர்நால்வர்மாதவவிரதர்மகிழ்ந்துபோனார். (௯௧)

மோனநீங்குசருக்கமுற்றும்.

ஆ—திருவிருத்தம—௯௯௧.

## தவங்காண்சருக்கம்.

நான்மறைநலமுடையவர்சிறுவர்நாலவருமேகினர்நறையளகத்
தேன்மொழியுமையவள்செய்தவமுஞ்சிந்தையினுறுகாதலுமுலகில்
வானவர்முதலினர்தாமறியமனமுறுகாலமும்வந்தணுகத்
தானொருதனிமுதலானபிரான்றமனியவரைமிசைவரநினைவான். (௧)

நிறைதவராடையனெறியுடையனில்வுசெய்முடியினனிள்குடைய
னுறைபுனலுலவியகுண்டிகையனூன்றியகோலொருகரமுடையன்
முறைதருதிருநீறணிமெய்யன்முன்னூலிலகியமுந்நூலன
மறைபயின்முதியவர்வடிவுகொடுவளைபுரமொடுமொருதனிகநதான். (௨)

வந்திமகிரியிடைகவுரிதவமகிழ்வொடுபுரிசாலையின்முனமே
சிந்தனைதயவுடன்வந்தெயதச்செறிகடைகாத்திடுசிலமினனு
ரந்தணரோமுதியவரோமெய்யறிவுடையவரோவாதணரோ
சுந்தரரோதூயவரொயெனச்சொல்லினர்மலரடிமிசைதொழுதார். (௩)

இரவியின்வெயிலொளிதெரியாதவிமகிரியிடமொருதனியினராய்
வரவுமேகருதுவதெளிதலநீரவநதுறுகருமமதுளையுமெனத்
திரமுறுமிமகிரியரசுதவுசேயிழைபுரிதவநனிகாணப்
பரிவுறுதயவொடுவந்ததெனபபழமறைவேதியனுரைசெய்தான். (௪)

சொல்லியவாய்மொழியதுகேளாத்தோகையருமையவண்முனமெய்தி
நல்லியதுறுமறையவர்செய்திநவிலலுநாயகியுலகீன்ற
பல்லியுமறைமுதியவராகின்மகிழ்வுடனியவண்வரவழையுமென
வொல்லையிலவண்முனமேகொடுவந்துய்த்தனர்கருணையதுடையோனை. (௫)

கண்டனனிவர்திருக்கயிலாசக்கண்ணுதன்மலரடிகருதிமெத்
தொண்டருமாமெனநேயமுடன்றெழுதனடொழுதொருபானின்றுள்
ளண்டனிகுழல்னநடைவிசையைமணியணிதவிசொருபாலிடலுந்
தெண்டிலாவிடமுதெனதகருத்தேவனுமகிழ்வொடுவைகினனால். (௬)

இருந்தனனிருந்தபின்னுமையவளையினிதுடனேபார்த்திவைசொல்வான்,
பொருந்தியநலனொருபுலனழியப்புரமிகுநயவொடுபுரிதவமென்
வருந்தினையெதுபொருள்விழைவுற்றாய்மனத்திடையெண்ணியதுரையெனலுந்
திருந்திழைகருங்கயல்விழிகாட்டிச்சேயிழைவிசையைநீயுரையென்றாள். (௭)

வேறு.

அப்பொழுதுவிசையையுந்தானருந்தவனுக்கெனையுரைக்கவருள்செய்தாளென்
றொப்பரியவன்புடையாளெதிர்நின்றேமகிழ்வினுடனுரைக்கலுற்றாள்
செப்பரியபரம்பொருளாஞ்சிவபெருமானவந்துமணஞ்செய்யவேண்டி
யிப்பரிசுதவம்புரிந்தாளென்றாள்வெண்ணகைபுரிந்தானிறைவன்சொல்வான். (௮)

கடக்கரிமுன்னுகைத்தோனுங்கமலத்தோன்முதல்யாருங்காணாதன்
மடக்கொடிதான்றவம்புரியவருவனோவந்தாலுமணஞ்செய்வானோ
திடப்படவுமுரைக்கின்றேனிவளருமைபெண்ணரசிதிவ்யமான
வுடற்கருகவேண்டாங்காணுமையவளுக்கெளியவனோவொருவனென்றான். (௯)

பத்திமையான்மாதவத்தோரளப்பிலர்முன்றவம்புரிந்தும்பரமனாதி
நித்தனெதிராமையினானெடுங்காலமுடலிழைத்தார்நீதான்கேளா
யெத்தவங்கள்புரிந்தாலுமீசனுமைக்கெதிரோவந்தெய்தமாட்டான்
புத்தியலவித்தவசுபுரிவதாகாதெனறான்புரததைவென்றான். (௰)

இன்னவகையுரைத்திடலுமிமையமாணிதுகேளாவெம்பிரானை
யுன்னுமடியானெனவேயுன்னினேனறியாமலுவப்பிலாதே
சொன்னமொழியான்மனதுதுணுக்குற்றேனறிவுறுத்திச்சொல்வனென்றே
மன்னியமெய்நாணீங்கிமுன்னேநின்றுரைசிறிதுவழங்குகின்றாள். (௰௧)

பொருவிலாப்புனிதனெங்கோன்யான்புரியுந்தவநினைந்துபோந்திலானேற்
கருதியவித்தவம்விடேன்கடியனோனபளப்பிலநாட்கழியச்செய்தே
யுருவொடுமென்னுயிர்கழிவேனுடல்பழுத்தமூப்பினுணர்விலாதே
பெருமையிலாச்சிறுமைமொழிபேசுகின்றாய்பித்தனோபெரியோயென்றாள். (௰௨)

பவளவிதழுமையவடான்பகர்தலொடும்பனவமுதியவனுநீதான்
சிவனைவிருப்பொடுமணப்பநினைந்தனையேயவன்குணங்கள்செப்பக்கேண்மோ
கவனமொடுமாடேறிநடத்துவான்றலைப்பலியுங்கவர்வானிந்தப்
புவனமெலாஞ்சுடுகாட்டிலாடுவான்வெண்பொடியும்பூசுவானே. (௰௩)

கரியுரியும்புலியதளுங்கலையான்கட்செவிப்பணியன்கனலார்கையன்
புரிவளையின்குழையனென்புபுனைமார்பன்வெண்டலையும்புனைவான்கங்கை
விரிசடையன்வெள்ளருக்காரறுகொடுகொக்கிறகுமத்தம்விரும்பிச்சூழ்வா
னரியகொடுவிடத்தையுண்டோனரும்பூதப்படைசூழுமணிகத்தினே. (௰௪)

வேறு.

தந்தைதாயிலன்கேள்வடிவொடுகுணந்தானிலொன்றனியானே
யிந்தவாறவனியல்புளதாவதிங்கேநதிழைபிதுவெல்லாம்
வந்ததானுனக்கெய்தவோதவஞ்செய்துவருந்தமதுறநின்றாய்
விந்தைசேர்மலைமன்னவன்மகட்கிதுமேன்மையோவிருப்பாமோ. (௰௫)

கங்கைவேணியனிம்மொழிகூறலுங்கவுரியுமதுகேட்டுச்
செங்கையாலிருசெவியதுபொத்தியேசிவசிவாவெனப்போற்றிப்
பொங்குவெஞ்சினக்கோபமுமனத்திடைப்பொருமலுமீதூரப்
பங்கமில்லதோர்கற்புடையவள்பரைபரிவொடுபகர்கின்றாள். (௰௬)

அந்தணாளனேயெம்பிரானிடத்துனக்கன்புதானிலையாகு
நிந்தைபேசினைநீறுடல்பூசினைநீபுனைநதிடுவேடம்
புந்திவேறதாய்ச்சுனையொருபுலியின்றோல்போர்த்துவந்ததுபோலு
மிந்தமாதவச்சாலையிலழைத்ததெனேழைமையெனச்சொன்னாள். (௰௭)

நெறியிலாதுமுன்சிறுவிதிநின்னைப்போனிநதனைசிலசொல்லி
யிறைவனார்தமையிகழ்ந்தனன்வேள்வியோடிறநததுமறியாயோ
மறைசொல்வேதியநாரிமொழிப்பினுன்மதியிலாமனம்பெற்று
யறிவிலாதுரையாடினையுனையறிவுடையவரிகழ்வாரோ. (௰௮)

சுருதியாய்ந்துடனறியினுமம்முறைசொல்லினுமுணர்வில்லாப்
பெருமிதப்படரொழுக்கமேற்கொண்டுபிஞ்ஞகன்றனையிகழ்வுறறே
விரிதிரைப்புவனத்திடைச்சுழலுவர்மெய்ப்பதமெய்தாரொன்
றரியவந்தணர்க்குண்டொருசாபமதுன்னையுமணுகாதோ. (௰௯)

பதியைநிநதைசொல்பாவையர்போற்பசுபதியைநீயிகழ்வுற்றாய்
விதியுமுன்பிகழ்ந்தொருதலையிழந்ததுவேதநீயறியாயோ
வதிகமாமுபநிடதத்தினுட்பொருளாகுமெம்பெருமானைத்
துதிசெய்யாமன்மெய்ப்பரகதியடைந்தவர்யாவரோசொல்வாயே. (௨௰)

அந்தணாளிலருமறைவிதிப்படியஞ்செழுத்தையுமோதிச்
சுந்தரத்திருவேடமுநீறுமெய்துலங்கவேயணிந்தன்பாய்க்
கந்தரங்கறுத்தவர்தமைப்பூசித்துக்கதியடைநதவர்கோடி
நிந்தைசொல்லவோவேடந்தாங்கியதுநீநினைநததேதறியேனே. (௨௧)

விருப்புமுள்ளத்தில்வெறுப்புமில்லாததோர்விமலனையறிவின்றி
யுரைத்தநிந்தனைக்கென்சொல்வேன்மாலயனுள்ளத்தினிடையுள்ளத்
தரித்திடுங்குறியாகவேபூண்டதுதானதுபுகழாகுங்
கருத்தினுனெவர்முக்கணன்பெருமையைக்கருதியுமறிவாரோ. (௨௨)

மாலயன்முதலாகியதேவர்கள்வந்தனைபுரிந்தேத்தச்
சாலவுள்ளனவின்றமையையங்கவர்தமக்களித்தருளுதன்
நிலைமுங்குணப்பெருமையுங்கடந்தவன்செயனிலையதுவாகு
நிலைகண்டனையிகழ்ச்சிசெய்தாயிதுநெறியலமறையோனே. (௨௩)

இந்தவாறுதான்வேதங்களிசைத்தனவிளையனவிதுவெல்லாம்
புந்திமிக்கவரறிவராற்புனிதனைப்புகழ்ந்திடாதிகழ்ந்தாயே
சிந்தைதீயவளுகையாலிம்முறைசெப்பினைபெரியோர்போல்
வந்ததேதுபொய்வேடமுங்கொண்டுபோவாசலின்புறத்தென்றாள். (௨௪)

ஆதிநாயகியிம்மொழிகூறலுமன்னமேமறைகூறு
நீதியாலுயர்தவமதுகாணவேநேயமோடிவண்வந்தோ
மேதுநீபுறமென்றனைதகுவதோபோந்ததுநாமிங்கே
வேதநற்சடங்காலுனைமணஞ்செயவென்றனன்விடையோனே. (௨௫)

பொய்ம்மைவேடத்தானிம்மொழிபுகலலும்பூங்கொடியதுகேளாக்
கையினாலிருசெவியதுபொத்தினள்கலங்கிமெய்நடுக்குற்றே
தையலீரிவன்போகிலன்யானினித்தரிககிலேனெனத்தானே
செய்யசிறடிவருந்தறவனமெனநடந்தனள்செல்கின்றாள். (௨௬)

மங்கைதான்வெகுண்டேகலுமற்றவண்மனத்தியற்கையுமன்புந்
திங்கள்வேணியனறிந்தனன்முன்புளதிருவுருவதுநீங்கிப்
பொங்கியார்த்தெழுபூதங்கள்சூழவேபோர்விடைமிசைதோன்றித்
தங்குமார்வமீதூரவேவானிடைத்தகவொடுமெதிர்வந்தான். (௨௭)

கருணைநாயகன்றன்னையேவிடையினமேற்கவுரியுமெதிர்கண்டா
ளருகுநாணொடுசென்றடிபணிந்தனளார்வமோடயனின்றே
மருவுநீதியாறறவநிலைசோதிக்குமாயையையறியாம
லுருகுமன்பினேனறிவிலாதிகழ்ந்திடுமுரைபொறுத்தருளென்றாள். (௨௮)

மாதுகேட்டியானம்மிடத்தன்புளமனவலித்திறத்தாலிப்
போதுசொல்லியேயிகழ்ந்ததுநம்மைநீபுகழ்ந்ததாயுளங்கொண்டோ
மாதலாலினிநற்றவமிழைத்திவணயருமவ்வகைவேண்டாந்
காதலாகவேநாளைநாம்வந்துனைக்கடிமணஞ்செய்வோமே. (௨௯)

என்றுகூறியகருணையங்கடவுளாமிறையவன்மறைந்தேக
நன்றுநாயகனருளெனப்போற்றினளம்பனைத்துதிசெய்தே
யொன்றுசிந்தையளுமையவளிருந்தனளுவகையோடிதுவெல்லாஞ்
சென்றுவேந்தனுக்குரைத்திடவிளைவொடுஞ்சிலதியாபோகின்றார். (௩௰)

இறைவனுக்கிறைவாந்தருள்செய்ததுமினிதுடனுரைசெய்தா
ருறுதுயர்தவிர்ந்தமலனைத்துதிசெய்தேயுற்றிடுமனையோடு
நெறியினுங்கொல்லைவந்தனனுமைதனைநெடுநகர்கொடுபோனான்
பிறைதரித்தவர்பின்புதானசெய்திடும்பெருமையையுரைசெய்வாம். (௩௧)

தவங்காண்சருக்கமுற்றும்.

ஆ - திருவிருத்தம். ௭௫.

---

## மணம்பேசுசருக்கம்.

தாயுமையன்புமிக்கதவநிலையநலைக்கண்டு
நாயகன்விருப்பினோடுநலம்பெறவருளுநல்கி
யேயநற்கயிலையெய்தியிருந்தவனெழுவர்தூய
ராயநன்முனிவர்தம்மையகத்திடைநினைப்பதானான். (௧)

எழுவராமுனிவர்தாமுமிறையவர்நினைத்தபோதின்
முழுதுணரறிவின்மிக்கார்முதிர்வெதிர்விருப்பினோடுங்
குழுமிமுன்வந்துஞானக்குடிலைநாயகனைத்தாழ்ந்து
தொழுதனர்கரங்கள்கூப்பிநின்றிவைசொல்வதானார். (௨)

மாலயன்முதலாயுள்ளவானவருனக்கன்பானோர்
சிலநல்லேவலகேட்குஞ்சிறப்பினரிருக்கவேதா
னேனுறுமன்பாலெம்மையெண்ணுறுமியறகையாலே
சாலவுமேன்மைபெற்றோநதவததினுமதிகமானோம். (௩)

நிமலனேகருணையானேநித்தனேநெல்லைநாதா
வமலனேயெங்கடம்மையனபொடுநினைத்தலாலே
கமையுடையவாகளானோங்கலாஞ்சினத்தீமைதீநதோ
மிமையவர்தமக்குமெய்தாவின்பமேயெயதப்பெற்றோம். (௪)

பொருவிலாதொழிலுண்டாக்கிப்புவனகோடிகளெல்லாமெய்க்
கருணையாற்புரக்குநாதாகருதியேயெம்மையன்பாய்
வருகெனநினைநதாய்வநதோமகிழ்பணிவிடையையெம்பா
லருளுதியென்றார்மிக்கவருநதவமுனிவராேனார். (௫)

அனகனம்முனிவர்மாற்றங்கேட்டலுமவரைநோக்கிப்
பனிவரையரசனுனபண்புடையவன்முன்சென்றே
புனிதமெய்யுமையைநாளைப்புதுமணஞ்செய்யவேண்டு
நனிபெறவினவிவல்லேநமதுமுன்வருவீரென்றான. (௬)

இன்னவாறிறைவன்கூறக்கேட்டுடனிறைஞ்சியேகிப்
பொன்மலையரசனமுன்னேபுகழுடைமுனிவர்போனா
ரன்னவன்மேனையோடுமன்புடனெதிர்கொண்டேததிப்
பன்முறைபணிநதுவாழ்த்திப்பரிவினின்றிவைகள்சொல்வான். (௭)

இம்மலைபுனிதமெய்தவெநகடம்பவங்கடரச்
செம்மையீருமதுசெய்யசீரடிநோவவுங்க
டம்முடல்வருந்தவுள்ளத்தயவுடன்றமியேனுகு
நம்மடியவன்முன்பாகவந்ததெனுவல்லீரென்றான். (௮)

இமையவெற்பரசனேயுன்னிடம்வரல்வினவிலெங்கோ
னுமையவடன்னையிர்நாளுவந்துடன்வதுவைசெய்வா

ணமைவொடுமுன்பாற்கேட்டுவரவருள்செய்தானென்னக்
கமையுடையவனுமன்பாய்க்கனிந்துளமிசைந்துசொல்வான். (௯)

வானவரயன்மாலோடுமற்றுளவுயிர்கட்கெல்லாந் .
தானவனானமூர்த்திதனக்கிந்தவுமையையீய்ந்தே
நானுமனீகுடிமையாவேனென்றவனவிலலோடு
மேனையுமங்கணெய்திவ்விளைந்தவாறுன்னிச்சொல்வான். (௰)

போதவன்புதல்வன்றன்னோர்புதல்வியைமணத்தினல்க
வாதியங்கடவுடான்முனவன்றலையறுத்தானென்பார்
நீதியினவனையுன்னினெஞ்சகமஞ்சுமெங்கள்
கோதையையாரோவல்லேகொடுபபவொனறுசொன்னாள் (௰௧)

இம்மொழிகேட்டசத்தவிருடிகளவளைநோக்கிச்
செம்மையிறககன்முன்னாட்செய்தவேள்வியினிலாங்கே
நம்மிறைக்கவிநல்காமனுடொறுமிசழ்தலாலே
வெம்மையினவன்றன்சென்னிவீரனுனமுடிவுசெய்தான். (௰௨)

அடியவர்க்கருளைநல்கியருளிலாதவரையெலலா
மடிவுசெய்திடுவனெங்கள்வரதனுக்கடைவிதாமா
னடலையன்றிதுமெயயாகுநடுங்கலேமேனைநெஞ்சிற்
படொழிநதெந்தைதன்னைப்பரிவொடுநினைவாயென்றார். (௰௩)

முனிவரர்மகிழ்வினோடுமொழிதலுமுன்புநின்ற
பனிவரையரசனநதப்பான்மையாமெனவலோடுங்
கனிமொழிமேனையஞ்சிக்கண்ணுதன்மேன்மையோரா
தினையனபகாநதேனேழையேனெனவுரைக்கலுறறாள். (௰௪)

பிறையணியடிகள்செய்கைபெண்மதிப்பெற்றியால்யா
னறிவிலாதுரைத்தேனென்றேயருநதவமுனிவர்பாத
நெறிமுறைபணிநதுநின்றுநிமலனைவாழததியுள்ளப்
பொறுதியுள்ளவரோநீரொன்புன்மொழிபொறுப்பீரென்றாள். (௰௫)

இன்னசொற்கருள்செய்தார்களெழுவருமிமையகோத்ர
மன்னவனதனைக்காணுமதியுடைமுனிவிர்காணீ
ரன்னவளுரையைக்கேளாதாண்டகையழகுக்கான
கன்னிகல்லியாணநாளைக்கடிதுடன்வரச்சொல்வீரோ. (௰௬)

அரசனங்குரைத்தலோடுமருந்தவரதனைக்கேட்டுப்
பிரிவிலாமகிழ்ச்சிகூர்ந்துபேரருளாசிகூறிப்
பரிவொடுமெழுவரானபண்ணவரினிதுநீங்கி
யுரியதங்கயிலையாருமொங்கலினுவந்துவந்தார். (௰௭)

இலங்கியகயிலைவந்தவெழுவராமுனிவர்தாமு
நலங்கிளர்நந்திநாதனல்லருட்பெற்றேயேகித்

தலிங்குவெண்பொடியின்மேனித்தூயவனடியிற்றாழ்ந்து
வலங்கொடூழ்ந்தங்கின்றமகிழ்வுடனுளாக்கலுற்றார். (௰௮)

தங்கவெற்பரசன்றானுந்தூயவ ளுமையையன்பாய்
மங்கலவதுவைசெய்யமகிழ்வுடனிசைந்தானென்றார்
கங்கையையணிந்தநாதன்கருணைசெய்தவரைநோக்கி
யுங்கடம்பதத்தின்மேவுமென்னலுமுவந்துபோனார். (௰௯)

அண்ணலெம்மிறைவன்செய்யவடியிணைபணிந்துபோற்றிப்
பண்ணவரொழுவர்தங்கள்பததிடைபோயினாக
ளெண்ணமிவ்வகைதானிறபயிமையவெறபரசனன்பாய்த்
திண்ணியதிறத்திருலேசெய்தவாறதனைச்சொல்வாம். (௨௰)

மணம்பேசுசருக்கமுற்றும்.

ஆக திருவிருத்தம். ௱௨௰.

---

## வரையலங்காரச்சருக்கம்.

மாதுநோறறிடுதவத்தினைவிரும்பிமுன்வந்தே
யாதிராமுனைமணஞ்செய்வோமெனவுரைத்ததுவுங்
கோதின்மாதவரொழுவரும்வினவியகுறிப்பு
நீதிமன்னவன்மகிழ்வுடனினைநதனனெறியால். (௧)

உலகமன்னுயிர்க்குயிரொனுங்கயிலையோங்கலினு
ளிலகுபூணுமைதனைமணஞ்செயவருதலினு
னலமிகுநதிடாவமணிநகரலங்கரிபப
நிலவுபொன்னகர்த்தச்சனவ்விடைவரநினைநதான். (௨)

நினைத்தகாலையினிகரில்பொன்னகருறைதச்சன்
மனத்திலன்பொடுமன்னவன்முனம்வநதுவணங்கி
யெனைநதயாவொடுநினைத்தனையானசெயயும்பணிக
ளனைத்துஞ்செய்குவனருளுதியாலெனவுரைத்தான். (௩)

முக்கணாதர்க்கியான்பெறுமுதல்வியாம்பரையைத்
தக்கநன்மணம்புரியெனவளிப்பனித்தரைமேன்
மிக்கதாகுமிவ்வரையிலென்வியனகரொல்லா
மிக்கணத்தினிற்பொன்னகராக்கெனவிசைத்தான். (௪)

இலங்கன்மன்னவன்விளம்பியபோதுவித்தியனுங்
குலங்களோடுநானுய்ந்தனனெனமனங்கொண்டே
யலங்குபொன்வரைமீதுளநகரொலாநதுய்தா
யலங்கரித்திடமகிழ்வொடுநினைந்தணிசெய்வான். (௫)

பொன்னிமாசலப்பூந்தருக்கால்களாய்ப்பொலிய
வன்னகோடுகள்பரப்பியகழிகளாயமைய
மின்னுமேகங்கண்மேலுறப்பொருந்தியமேன்மை
துன்னுபந்தராயம்மலைமுழுவதுந்துலங்க. (அ)

மாடமாளிகைகோபுரமண்டபங்கலைத்தேர்
கூடிசாலைகள்கொடிநெடுந்தோரணங்குறிஞ்சி
யாடரங்கமோடம்பலமணியணியாக
நீடுமாவணவீதிகடோறுமேநிறைத்தான். (ஆ)

நிலவுபன்மணிக்கதலிகைநெடியகேதனங்க
ளலகிலாதனவிசும்பிடைமீச்செலவமைத்தா
னிலகுகாவணமிசைமணிமேடையுப்பரிகை
பலவுமெங்கணுஞ்செய்துபூம்பந்தரும்பணித்தான். (சு)

மீதினுள்ளிடைகம்பலைவிதானமுஞ்செய்து
சோதிவெண்ணிறக்கவரிபொன்மாலையுந்தூக்கிச்
சீதமுத்திலிந்திரநீலத்தாற்சிறந்த
போதிரண்டையும்விளக்கியமாலையும்புனைந்தான். (கூ)

வேறு.

ஏய்ந்தநன்மணியொன்பதுமெங்கணுந்
தோய்ந்ததூணடொறுந்தூண்டொறுஞ்சூழவே
பாய்ந்தபேரொளிப்பான்மையதாகவே
வாய்ந்தபூங்குலைவாழைகணட்டினான். (க0)

மாகநாட்டின்வளமிமையாசல
மாகவெங்குமலங்காரமுஞ்செய்தா
னேகமாகநிறைத்திடுதூணெலாம்
பூகமும்பழுக்காயொடுபூட்டினான். (கக)

இயக்கர்கோனகரிம்மலையாமென
மயக்கமின்றிவளைதலைச்செய்ததி
னியக்கொடிமணநாளையென்றெங்கணும்
வியக்கும்வெண்கொடிமேலுறக்கட்டினான். (கஉ)

பண்ணுறச்சொல்பரையைமணஞ்செயப்
புண்ணியபபொருள்போந்திடப்போந்திடும்
விண்ணவர்க்கும்விரும்படியாருக்கு
மெண்ணில்சாலையிருப்பவியற்றினான். (கங)

அளவதாயிரப்பத்தளமயோசனை
யுளவிசாலப்புரிசையதொன்றினைத்
தளியினோர்புடைதான்செய்துகோபுர
வளமைவாயில்கணாலும்வழங்கினான். (கச)

அதினிடைசந்திடவப்பரப்பன்னதோர்
வதுவைமண்டபமாகனகத்தினாற்
புதிதியற்றினன்புங்கவனுருறை
கதிதருங்கயிலைக்கிரிக்கோயில்போல். (௰௫)

அன்னமண்டபத்தாயிடைசூழவே
மன்னுசந்தனமான்மதங்குங்கும
மின்னசேற்றிற்பன்னீர்விட்டிளக்கியே
பொன்னிறச்சுவரெங்கணும்பூசினன். (௰௬)

பூவிதானம்பொருந்திடச்செய்துட
னாவிவாசநனீரதுதூவியே
தேவரானவர்சேரவிருப்பவே
மேவுமாசனம்வெவ்வேறியற்றினான். (௰௭)

ஆயதாமரைசொன்னமணிமுகி
னேயவானவினெய்தல்பொற்செண்பகம்
பாயுமின்னொளிபான்மையதாமென
வாயவேதிகையங்கணமைத்தனன். (௰௮)

கந்தபூந்துணர்கண்ணடிசெம்மணி
பைந்தொடைவெண்கவரிபஃறுகி
னந்திடாதலைமததானம்பனாருடன்
வந்தபேர்கண்மனங்கள்களிக்கவே. (௰௯)

தவர்கள்விண்ணவர்தையலராயுறு
மவரைப்பாவையிற்செய்துயிராசனியே
கவரிவீணைதார்கையிடையேந்தியே
நவரசம்பெறச்செய்தொழினல்கினான். (௨௰)

உறைமினாரினுயிருறுபாவைகள்
குறுகியின்னிசைகொண்டுகொண்டாடியே
மறுவிலகஞ்சங்கண்மத்தளங்கொட்டவுஞ்
சிறிதுபாவைகளாடவுஞ்செய்வித்தான். (௨௧)

விரிசிறைமயில்வெள்ளனநேமிக
ளரிகரிபரியண்டர்போருநர்கண்
மருவியெங்குமணிகளிலோவியப்
பெருமைசெய்துபிறங்கநிறுத்தினான் (௨௨)

இலகுமண்டபநாப்பணிலங்கவே
யலகிலிந்திரநீலத்தரியணை
குலவுபேரொளிகொண்டுறச்செய்தனன்
மலைவிலாதுமம்மாதுயிருக்கவே. (௨௩)

வட்டமண்டலவேதிகைமன்னவே, யிட்டவெள்ளியின்றண்டமியற்றினன்,
பட்டியததலந்தோறுநறபண்டமு, மட்டமங்கலமானதும்வைத்தனன். உச

வாய்ந்தசெங்கதிர்வான்மதிவாய்ததிம், காந்தம்வச்சிரங்காஞ்சனமுண்டகம்
பூந்துகின்மணிபோலவெறுககையா, சேயநதமணடபமெங்கணுகலகினன். உரு

பூததாமரைப்பொய்கைகளோர்புறம், வாய்த்தகாவியின்வாவிகளோர்புறம்
காய்ததவுறபலமாாகயமோராபுற, மாாததநீர்ச்சுனையெங்கணுமாக்கினன். உசு

வரியந்தபாசறைவச்சிரநிததில, மேய்நதவெண்பளிங்கீர்நதிடுபச்சைக
ளாயநதநன்மணியாடகமனனதாற, பூநதடங்கள்பொருநதவுநல்கினன். உஎ

பொருவிலகறயகப்பூகதஞ்சாதகில், பருத்தகனனல்கதலிபலவுமாத்
தருபொறபுனனைதமனியத்தாலுஞ்செய, தருளினனறபலமதருளவே. உஅ

இநதவாறளவிலவளம்பாவையுஞ், சிநதைகூாதெயவக்கம்மியன்செய்தலும்
விநதைசேரிமையாசலவெறபனும், வநதுபார்ததுமகிழ்ச்சியையெய்தினன். உகூ

மாயனுனமுகனமறறுளதேவாக, மேபமாதவாசூர்மடவார்களுந்
தாய்கல்யாணநஞனக தவருகவென், றுயனுதரளப்பிலர்போக்கினன். ஙo

அநதநோதியசொறறெரிநதும்பரு, மாதவத்தருமறறவர்யாவரு
மாதிநாதனெம்மையனைச்சூழ்நதுடன், போதுகினறனமெனறுபுகன்றனர். ஙக

கோட்புலிக்கொடிக்கொற்றவையாமளை, வாட்படைக்கொடுங்காளிகள்மற்றவர்
நீட்படுநதிகாசேரிழையாருமை, தாட்டுணைக்குத்தகும்பரிசேநதினர். ஙஉ

நன்னுதறறிருநாமகண்மறறவர், பன்னிமார்சசிதம்பதியேவலாற்
பொனனிமாசலமீதுபொருநதியெம், மனனைதாடொழுதன்பின்வணங்கினர். ஙங

கமலமங்கையர்கனனியர்யாவரு, மமலனெய்தவருநதவமன்பொடு
மிமையமீதிலிருநதுபுரிநதரு, ளுமையைநனனலஞ்செயயவுவந்தனர். ஙச

தயவினுற்றவவேடத்தைநீக்கியே, யியையுமுன்னமுகெய்தவிறைவியை
நயமிகுநதருணதனமணமபுரி, பயனிறைநதிடுபானமைபுதுககினர். ஙரு

மிக்கமநதரமேருமுதலுள, தொக்கசுற்றமுஞ்சூழ்கடலேழ்களும்
பக்கமனனரும்பனனகவேநதருந, திக்கயங்களுஞ்சேரவும்வநதவே. ஙசு

வேறு

ஆயுழியரசனம்மலையுளாரோடுங், காய்கதிர்வலஞ்செயுங்கயிலையெய்தினன், வா
யிலினநதியால்வழிக்கொண்டேகியே, தூயவனடியிணைதொழுதுசொல்லுவான.

உத்தமியுமைமணஞ்செய்யவுன்னினை, வித்தகக்கணிதர்தாம்விதிக்கும்பங்குனிச்
சித்திரத்திங்களிறசிறநதவுததிர, மித்தினமுகுர்ததநன்றிமையத்தெயதெனறான். ( )

அன்புடனமலனுமவனைநோக்கியே, பொன்புணரிமையத்திலினிதுபோதுவோ, முன்
புநீசெல்கெனமுறையிறைஞ்நதுட, னின்பமாய்ததன்னகரிருக்கையெய்தினன். ஙக

வரையலங்காரச்சருக்கமுற்றும்.

ஆக திருவிருத்தம்-எகூ,

## கணங்கள்செல்சருக்கம்.

ஈங்கிதுகாலைதன்னிலெம்பிரானருளானந்தி
பாங்குறவரலுநோக்கிப்பலாமணம்புரிதல்காண
வோங்கியகணங்கண்மாயன்முதலினோரும்பராதி
யாங்குளபேரையெல்லாமழையெனவருளசெய்தானே. (க)

இந்தவாறிறைவன்கூறவினயமாயிசைந்துதேவ
நந்தியெம்பெருமான்றானுநன்மணப்பொருட்டால்யாரும்
வந்துறவுளத்தினோர்ந்தான்மற்றவர்யாருமன்பாய்ச்
சிந்தையினுணர்ந்தாரன்னோர்செயலினைக்கூறலுறறும். (உ)

புவனகோடிகடானுய்யப்பொன்மலைமகளையன்பாய்ச்
சிவன்மணஞ்செய்யவுன்னுஞ்சிறப்பினைத்தெரிந்துபோறறி
யுவகையுங்களிப்புமிக்கவுளத்திடைமகிழ்வுமுந்தப
பவமொழித்தருளும்வெள்ளிக்கயிலையிறபடர்வதானா. (௩)

வேறு.

நெற்றித்தீவிழிப்பஞ்சவத்திரனொடுநிறைந்தனர்நிகரில்லா
வெற்றித்தீப்பொறைவிடைப்பெருங்கேதுவும்வேறுவேறணியாகச்
சுற்றுசூலத்தோராயிரகோடியர்துன்னினர்புடைசூழ
வுற்றகாலத்தீப்பெயருடையுருத்திரனுவகையோடுறவந்தான். (௪)

ஒலிசுழறறிடுசூறையும்வடவையுமுயிர்பபிணிறகரிந்தோடப்
பலவுயிர்த்தொகையலமரவிழித்திடும்பார்வையர்பகுவாய
ரிலகெழுபதோடிரண்டுகோடிக்குறளீண்டினதிடமின்றி
வலிமழுபபடைநீண்டகூர்மாண்டருமகிழ்ச்சிமுந்துறவந்தார். (௫

நெடியபாதலத்துறைபவர்கனல்சொரிநெற்றிநேத்திரமிக்கார்
கொடுமைதங்கியபடையினர்சடையினர்கோடிகோடியராகும்
படருத்திரகணத்தவர்நிறைந்திருபாலுமெங்கணுஞ்சூழ
வடவுருத்திரனாடகேசனுங்கடிதன்பினுடன்வந்தான். (௬)

நத்திலங்குகைநரசிங்கநடுக்குறநாடுபுள்ளுருவானே
னத்தனைமுன்னிகழ்சிறுவிதிசிரமறுத்துவேள்வியுமாய்த்தோன்
பத்துநூறெனுமாயிரகோடியராம்பாரிடமவைசூழச்
சித்தமன்பொடுவீரபத்திரவுருத்திரனொடியினில்வந்தான். (௭)

வீரப்பேருடையுலகெலாஞ்செங்கையின்விரலொன்றினிடைதாங்குங்
கோரத்தாற்பலவண்டத்தினுயிர்களைக்கொன்றுகொன்றடனுண்ணும்
பராக்காத்திரப்பாரிடநூறெனப்பகருங்கோடிகளீண்டக்
கீரிப்பேருடைக்கடனிறவண்ணனுங்கயிலையங்கிரிசார்ந்தான். (௮)

அகந்தையான் முனம்படைப்பினைமறந்திடுமயனுளமருள்போதிற்
செகந்தழைப்பவேமுக்கணுயகனெந்தைசிவனருளதனுலே
யுகந்ததானவனெற்றிமேலுற்றவற்குறுதொழில்விதியெல்லாம்
பகர்ந்தவாலுணர்வளித்தவருருத்திரர்பதினொருவரும்வந்தார். (௯)

இந்தமேன்மையருருத்திரரிவரலாலெண்ணருமுலகெல்லாஞ்
சிந்தவேசெய்துதிரும்பவுமளித்தருள்செய்துளமகிழகூர்ந்தே
கந்தமாமலர்க்கொன்றையஞ்சடையினன்கருணைபெற்றுளராகு
மந்தருத்திரகணங்களும்புத்தியட்டகர்களுமுடன்வந்தார். (௰)

தூயதண்கடல்யாவையுங்காலுறுதுகளிறுறற்றார்ப்போர்க
ளாயவெட்டுநூறுயிரகோடிகளெனவளர்ந்திடுபூத
மேயசேனைகள்சூழ்ந்துடனேவரவிருப்பொடுதிசைகாக்கு
நேயவெண்மருமுக்கணுனிறைநதிடுநெடுங்கயிலையைச்சார்ந்தார். (௰௧)

முக்கணுயகனெம்பிரான்யாவர்க்குமுதல்வனம்பகமீன்ற
விக்கமாமணிநீறுடன்புனைந்திடுமன்பினனொருநூறு
புக்ககோடியாசாரதப்படையிருபுடையினுஞ்சூழ்போத
வக்கணத்திடைவநதுகுண்டோதரனரன்கயிலையைச்சார்ந்தான். (௰௨)

ஆனதண்டங்கள்யார்க்குமொன்றுகச்செய்தடர்ந்தழிததழிவாகப்
போனவண்டங்கடிரும்பவும்வரவருள்புரிபவருயர்பூதர்
மானவெற்றியோர்நூற்றிருகோடியர்வந்திருபுடைசூழப்
பீனகண்டகண்ணனும்பிஞகியுமரன்பெருங்கிரிதனைச்சார்ந்தார். (௰௩)

முகங்களாயிரங்கைகளீராயிரமுதிர்வனாகிகர்மேனி
யுகங்களாயிரஞ்செலகினும்பொருதிறலுலைவிலாதுறுவீர
ரகங்கொளெட்டுநூற்றைம்பதுகோடியரணியணியாய்ச்சூழ
மகிழ்நதுவநதுறுபானுகம்பனுமரன்வளர்கயிலையைச்சார்நதான். (௰௪)

தம்மைத்தான்புகழ்நதோதிடுநதேவாகடலையினைப்படைவீறை
வெம்மைச்சிற்றத்தாஞெடியினிற்றலைத்திடும்வெற்றிகொள்விறல்வீரர்
பொம்மெனக்களித்தார்த்தபல்கோடியர்பூதர்கள்புடைசூழச்
செம்மைச்சிந்தையன்சங்குகன்னனுமுடன்றிருக்கயிலையைச்சார்ந்தான். (௰௫)

நீலனும்விறற்றண்டியும்வாட்படைநெடியகைக்கரனேடுஞ்
சாலவிச்சுவமாலியுங்காளகண்டனுந்தலைவர்களாகுஞ்
சூலமொய்ம்புடைத்தான்பலபூதருஞ்சுழல்கரக்கதையேந்தி
யாலமென்னவேயார்த்திடுந்தானைகளனந்தமக்கிரிசார்ந்தார். (௰௬)

கடியகூற்றுவன்மொய்ம்பினைக்கடந்திடுகடுஞ்சினப்பெரும்பூதகீ
கொடியதாம்படைநூற்றுடன்முப்பதுகோடியர்புடைசூழ
வடியரானவர்க்கருள்புரிகருணையனமலனைப்பணிந்தேத்தி
யிடபவாகனம்பெற்றவீசானதேவீசனுமுடன்வந்தான். (௰௭)

மாலயன்முதல்வாசவனமரர்தன்மாதிரம்பரிப்போர்கள்
சிலவெங்கதிர்மதிபுறக்கோளொடுதிகழ்வசுமுதலோர்கள்
சாலவிஞ்சையர்முனிவரர்யோகிகள்சாருமெய்யடியார்க
ளாலமுண்டவனகயிலையங்கிரியினிலன்புடனடந்தார்கள். (௰௮)

நீதிமாமறையாகமமந்திரகலைமுதலைம்பூத
மோதினாலிரண்டுயர்ந்தகையோதியெட்டுரகங்ளொட்டுப்
போதுமேகங்களுலகங்கள்காலங்கள்பொருந்தியபொருளெல்லா
மாதிநாயகனெனவையாளுடையவனரனகயிலையைச்சார்ந்த. (௰௯)

இன்னவாறுளசரமசரங்களுமெவ்விடங்களுமெய்தி
மன்னுதன்மையைக்கருணையானோக்கினனமனமகிழ்ந்துடனந்தி
தன்னுசெஞ்சடைத்தனிமுதன்முனசெனநுசொல்லுமதுகேளா
வன்னபேர்களாம்யாவரையுமுனமழையெனவருள்செய்தான. (௨௰)

திங்கள்வேணியனம்மொழிசெப்பலுநதிறலுடையபுகழ்நந்தி
யங்கண்வாயிலினணுகியேயுருத்திரரவரவாகணத்தோடுஞ்
செங்கண்மான்முதறறேவர்கள்பிறரொலாநதிருககயிலையினுட்பண்
சங்கமோடவர்தாஞ்செலவிடுததனன்றமனியமணிக்கோயில். (௨௧)

சென்றகாலையிலங்கணோரரியணைசிறநதிடமீதோங்கித்
தனறுசெஞ்சடைப்பரமனுரிருப்பதுதுணைவிழியதகாணு
வின்றுபெற்றனம்பேறெனவிணையடியிறைஞ்சினாரவனசீர்ததி
நினறுவாழ்த்தினாாடினர்பாடினர்நிகரிலாமகிழகூர்நதார். (௨௨)

சிருருத்திரர்தமைப்பலகணங்களைத்தேவரைமுனிவோரை
யாரையுமிவரிவரெனவரிசையாயாண்டுதன்விரற்றூண்டி
நீருரஞ்சடையாதிநாயகர்க்குமுன்னின்றவர்நிலைகூறிப்
பேருமைத்தனன்புகழ்நதுதோததிரஞ்செயதானபெருமைசேர்நந்திசன். (௨௩)

பஞ்சவத்திரன்றழற்பெயரானுயர்பரிவுறுகூர்மாண்டன்
வெஞ்சினத்திறலாடகேசன்விறல்வீரபத்திரனுதி
யெஞ்சலில்லவுருருத்திரகணத்தினர்யாவருமிறையோனைத்
தஞ்சமெனறுகைகூப்பியேமுறைமுறைதாழ்நதனரெதிர்நின்றார். (௨௪)

ஆயகாலையினுன்முகனினிதொடுமமலனுக்கணியாகத்
தாயமாமுடிமுதலியபலகலன்சொனனபீடிகைமீதி
னேயமோடுறக்கோணர்நதுமுன்வைத்தனனின்றடிபணிந்தேத்தி
மேயவார்வமோடிவைமனத்துன்னியேமேன்மையாற்சிலசொல்வான். (௨௫)

விமலனேயுனக்கில்லையால்விருப்பொடுவெறுப்புமெங்களுக்காக
வமலனேமணஞ்செய்யவுமுன்னினையாதலின்மகிழ்வாகி
நிமலனேமயல்புரிபணிப்பணியென்புநிலவியபணிநீக்கிச்
சுமையுமிப்பணிபுனைந்திடவேண்டுநீதருவரமிதுவென்றான். (௨௬)

பிரசமாமலராசனனிவ்வகைபேசலுநகைசெய்தே
யுருகுமன்பொடுநீமக்குதவணியுவந்தணிந்தனமென்னுங்
கருணைநாயகன்கண்ணுதலுயகன்கடல்விடமணிகண்ட
னரன்மகிழ்வுடனசெங்கையாலணிகலனதனைத்தொட்டருள்செய்வான். (உஎ)

வேதனன்புகண்டிவ்வகையருள்செய்தவிமலன்வெள்விடைப்பாக
னுதன்மெய்யணிபணிகளேயணிகளாய்நலம்பெறவினைகாலை
மாதினிப்பணிபொன்னொளிர்கினநனமகிதலம்பலகோடி
யாதல்செய்பவர்க்கிவ்வகையரியதோவரியதொன்றிலைத்தானே. (உஅ)

கலன்களாகவேபணியெலாம்விளங்குதல்கண்டதிசயமெய்தி
நலங்கொள்சிந்தையர்யாவருமகிழ்வுடனம்பனைத்துதித்தார்க
ளலங்கல்சூழ்குழறகவுரிபாலேகுவானன்புடனுளத்தெண்ணி
யிலகுபூதியன்குறிப்பினாலன்னவர்க்கிசைத்துடனெழுகின்றான். (உகூ)

கணங்கள்செல்சருக்கமுற்றும்.

ஆக- திருவிருத்தம். எ௱அஅ

---

## இமையமலையிற்சுவாமியெழுந்தருளின சருக்கம்

திருவருள்கருணைநந்திதேவன்முனபுகழ்ந்துசெல்ல
வருகுசூழமரர்யாருமருநதவத்தோரும்போற்றப்
பொருவிலாரதருமேதும்புருவொடுபுகழ்ந்துபாட
மருவுவிஞ்சையாகள்வீணைவாசிப்பமடவாராட. (க)

சுருதியாகமங்கள்யாவுந்துதித்திருமருங்கும்போதக்
குருமணியணியுங்குண்டோதரனிருதுவவுத்தோணமே
லருமறையினமுங்காணுவடியிணைவைத்தேயெங்கோன்
மருவியதருமமாகுமால்விடையேறினானே. (உ)

ஏறியவிடையின்மீதேயெம்பிரானிலங்கப்பாங்கு
கூறியபேர்களல்லாறகூடிமுன்வாயினின்றே
நூறுபேரன்பினோடுமுகந்துதோத்திரங்கள்செய்து
மீறியேதொழுதார்சூழ்நதவிலாயினார்க்கின்றாரால். (௩)

திங்கள்சூடிறைவன்செங்கட்சேவிடைபோதும்போதில்
வெங்கயமுகனுமாகுமேற்கொண்டுவெற்றிசேரு
மைங்கரத்தவனுமைஞ்ஞூற்றெழுபதுகோடியாகுந்
துங்கசற்பூதர்சூழச்சூழ்ந்துமுன்றெழுதுபோந்தான். (ச)

சந்திரனிரவியன்பாய்ச்சத்திரமெடுத்தேபோத
வந்தினான்கவரிவீசவருணன்சாந்தாற்றியாற்ற
விந்திரனாலவட்டமேந்தமற்றிமையோரெல்லா
முந்துறுவரிசையாவுமுறைமுறையேந்திப்போந்தார் (௫)

சல்லிகைதடாரிபேரிசாரிகைகுடமுழாவே
டொல்லியதுடிகைத்தாளமோங்குகொக்கரையெக்காளம்
வல்லதண்ணுமையேபேரிவயிரகரடிகையாமிந்தப்
பல்லியமுழக்கினார்கள்பாரிடத்தலைவர்தாமே. (௬)

வரதனாருளாறசூழ்ந்தவுருத்திரர்மாயன்வேதன்
புரிதவமுனிவோரேனைவிண்ணவர்போந்ததேருங்
கரிபரிபுள்ளுமானங்கடவுதம்மூர்திமேவி
விரவியேபோந்தாரய்யன்விருப்புறுபணிவிடாதோர். (௭)

யணிவிடைபுரிந்துபோதும்பாரிடத்தலைவருளளத்
துணர்வுடைத்தமிழ்ப்பாவாணரும்பாகளபூதரோனைக்
கணமுடன்சூழ்ந்துபொதககயிலையையகன்றுசென்று
னிணர்மலிகொன்றைநாதனிமையமால்வரையினமீதே. (௮)

ஆனகம்படகமாதிபல்லியமார்க்குமோதை
தானையர்பூதர்விண்ணோர்சார்ந்திடுமோதைசூழு
மேனையோர்புகழுமோதையெண்டிசைமுழுதும்போந்து
வானநாடணவியேழுவாருதியொலியினார்த்த. (௯)

இன்னணமெய்துமெங்கோனிமையமீதெய்தவந்த
மன்னவன்றமர்களோடும்வந்தெதிர்கொண்டுவாழ்த்திப்
பொன்னடிபணிந்துபோற்றிப்பொன்னகரதனின்மிக்க
தனனகரிடத்திலன்பாய்த்தகவொடுகொடுபோகின்றான. (௰)

பொன்மலைநகரிடைப்புனிதனெய்தலுங், கன்னியாகண்டுகண்களித்துக்காதலாய்
முன்னினர்மொய்த்தனர்முகிழத்தகையினா, ரன்னகர்தனில்விழாவணிநடத்தினார் .)

வீதிகடோறுமேவிரவியெங்கணுங், கோதைசூழ்குழன்மலர்க்கொம்பனாரொலா, மா
திநாயகனுருவதனைக்கண்டலுங், காதல்செய்விரகவெங்கடலுளாழ்ந்தனர். (௰௨)

புனையணிகலன்களும்பொன்னினுடையு, நனைமலரணியலுநறியசாந்தமு, மினைய
னபுனிதன்மெய்யெழின்மறைத்ததென், றனையமின்னார்மனமழுங்கிச்சோருவார்.')

நாயகனழலுருநமதுநெஞ்சகம், போயுருக்குவதுமெய்பொடிப்பககாய்தலாற், றூ
ய்மறையனுதினந்தொழுதுபோற்றிய, வேய்தருமுத்துவேய்முத்தென்பார்சிலர். ()

கருமணிவண்ணனுங்கமலத்தண்ணலுந், தருபுவனங்களுந்தழைப்பவெய்துவா, ரு
ருகியகாதலாலுடையுமுள்ளத்தெம், பருவரறணியவும்பார்ப்பரோவென்பார். ௰௫

பங்கயமாதினையனையபண்பினார், கொங்கையின்குறியினைக்கூர்த்துப்பார்த்தனர், த
ழகுவெண்கயிலைபோற்றயங்கலாலிறை, யிங்கிதின்மேவவுமிசைவுண்டோவென்பார்

என்றுவரம்வேண்டுவனவினிதுபெற்றேயித்தலம்ராமேசநல்லூரெனவேயாக
மன்றிவிடகடம்புரிவோரிராமநாதர்மலைவளர்காதலியெனப்பேர்மன்னி வாழ்கத்
துன்றுமுலகுள்ளோர்களுனைவரதுதலங்குதாம்பிரபன்னித்துர்ராடி
நன்றுபெறவிவ்விலிங்கந்தெரிசிப்போர்கணலம்பெறுகற்கதிவீடுநன்னிவாழ்க. (௮)

இன்னவகைமகத்துவமுண்டாகவெனறங்கிறைவனுரடிபேணிவிடைகொண்டேகித்
துன்னிவருகவிப்படைகளோடுஞ்சூழ்ந்துதுட்டனையிராவணனைத்துணைவனோடும்
பன்னுமுடிததலைதொலைத்துப்பின்னுமூலப்படைதொலைத்துமிதுலைவருபாவையோ
டு,மன்னுசேதுவிற்சிவனைபபூசைசெயதுவாநதயோத்தியிலரசமன்னிவாழ்நதான்.

சிலைவலியசிலைராமனிறைஞ்சிமூழ்குநதீர்த்தத்திலெவரோனுஞ்சென்றுமூழ்கி
நலமாகவிடுசிராத்தங்களெல்லாநடத்தியிராமேசனையுநயநதுபோற்றி ழ்த்த
மலைவளர்காதலிபாதம்வணங்கிவாழ்த்தின்மரபிலுள்ளதென்புலத்தார்மகிழ்நதுவா
வுலகிலுயர்செல்வமெல்லாம்பொருநதியப்பா லுறுகதியையெய்நாளு மூற்றுவாழ்
வார். (௯)

மதித்துலகம்புகழநிறைவளங்களோங்கிவளருமிராமேசநல்லூர்மருங்குசேர்ந்து
கதித்துவடபாலேதும்பொருனைநாபபண்கற்பாறைதனிலீசன்கமலபாதம் டு
பதிததுவைததானவநதுதெரிசிபபோருயயப்பண்பிறுெடுமுருத்திரபாதத்தைக்கண்
துதித்தினியவததீர்ததமூழ்கிபபோறறிறறுயாநீங்கித்துயகதிறுழ்நதுவாழ்வர். ௰

இன்னவகையாகுமிநதச்சடாயுதீாத்தததியல்பதென்றுசூதமுனியியம்பிப்பின்னு
மன்னுசுகமுனிவனுக்குவியாதன்சொன்னமகத்துவமாமணலூர்மங்கலமாந்தீர்த்தத்
துனனுகதிபபெருமைதருகதையைச்சொல்வேன் றூயதவமாதவரோயரனைப்போற்
றி, மன்னிமுறைபணிநதிருநதுகேண்மினென்றுமதிவதனச்சூதமுனிமகிழ்நதுசொ
லவான். (௰௧)

இராமேசநல்லூர்ச்சருக்கமுற்றும்

ஆக—திருவிருத்தம்—௲ளாயடு.

---

## மங்களேசுரதீர்த்தச்சருக்கம்.

பொன்மணிப்புரிசையோங்கும்பொருந்துபொன்மேடையோங்குந்
துன்னுநலவளங்களோங்குஞ்சுடர்செய்மாளிகைகளோங்கும்
பன்மணிமாடமோங்கும்பாண்டிநாட்டரசுசெய்யு
மன்னவனிருந்துவாழுமணவைமாநகரமாகும். (௧)

சீர்வளர்முகில்கள்சூழ்ந்துதிங்கண்மும்மாரிபெய்யுங்
கார்வளர்சோலைசூழுங்கமலங்களவாவிசூழு
நீர்வளர்கழனிசூழுநெய்தல்சூழ்பொய்கைசூழும்
வார்புனற்பொருனைசூழுமணவைமாநகரமாகும் (௨)

ஆசறுகரணமோங்குமரிவையர்கரணமோங்குந்
பேசுநற்கலைகளோங்கும்பிறங்குபொற்கலைகளோங்கு
மூசல்வண்டிசைகளோங்குமுளரிமுண்டகங்களோங்கும்
வாசனைகமழவோங்குமணவைமாநகரமாகும். (௩)

சந்திரகாந்தமேடைதனின்மரகதப்பொன்மேடை
யிந்துசேகரனைப்போலுமிமையமாமயிலைப்போலுஞ்
சுந்தரநிறையவோங்குஞ்சோலையிலுலவைதோறு
மந்திகளுசலாடுமணவைமாநகரமாகும். (௪)

பானலார்பழனந்தோறும்பணிலமுத்துதிர்க்கும்பாங்கு
கூனல்வெண்பிறைபோல்ச்சங்கொண்டபொன்மலர்களோங்குஞ்
சேனைகாவலர்கள்சூழசெகமனனர்பலருஞ்சூழ
மானவேலரசாவாழுமணவைமாநகரமாகும். (௫)

மங்களதீர்த்தமாடிமணவைமாநகரில்வந்து
திங்கள்சூடிறைவர்பாதந்தெரிசிபபோாபவங்களெல்லாம்
பங்கயநேசன்பார்த்தபனியெனநாளும்போக்கி
யங்கடியவர்கள்சூழவாலயம்பொருந்திவாழநாள. (௬)

பண்டொருகாலம்பஞ்சபாண்டவர்பண்பினோடு
தொண்டையங்கனிவாயினசொற்றுரோபதைமானைவேட்டுக்
கொண்டதோருவகைபொங்கக்கூடியேவாழுநாளின்
மண்டுபொன்மகதிவீணைநாரதனவந்துசொலவான. (௭)

கற்பினில்வடமீனுகுந்துரோபதைக்கயற்கணாளை
யற்பினெவ்வொருவர்க்கோரோராண்டவள்பதியதாகப்
பொற்புறமருவுவீரப்போதினிலொருவர்கண்டால்
விற்படைநீத்துமிக்கவிரதவேடத்தினோடும். (௮)

தீர்த்தயாத்திரையோராண்டுசெல்லுவீரொன்றுசெய்ய
பார்த்தனேமுதலுளோர்கள்சம்மதப்படவேசொனனன
பூத்தமாடகப்பொன்வீணைநாரதன்புகனறமேன்மை
வார்த்தைமந்திரமாயெண்ணிமகிழவொடுவாழுநாளில். (௯)

அன்னைபோலுலகங்காக்குமருச்சுனன்முன்னோர்பார்ப்பான்
மன்னுதன்பசுவைக்கள்வர்வந்துகொண்டேகலுறரு
ருன்னுடைத்தஞ்சங்காப்பாயென்னலுமுருத்துச்சீறித்
தன்னகர்தன்னில்வந்தசோரரைத்தடுப்பேனென்றே, (௰)

வில்லொடுகணையுங்கையிலவிருப்பொடுமெடுக்கவேண்டி
யில்லிடைச்செல்லும்போதிலின்பமாய்த்தருமனோடு
மெல்லியன்மயிலன்னாளுமெல்லணையிருப்பக்கண்டா
னெல்லையிலுணர்ந்தான்பின்னுமுயர்படையெடுத்துப்போந்தான். (௰௧)

வந்தபின்றொடர்ந்தசோரர்வலிதொலைத்தவர்மாய்த்தா
னந்தணன்பசுவுங்கைக்கொண்டன்பொடுபோயபின்னர்ப்
புந்திநாரதன்முன்சொன்னபுனிதநல்லுரைதப்பாம
னந்தலில்லாததீர்த்தயாத்திரைநடப்பதானான (௰௨)

எந்தநற்றீர்த்தமாடியெழுநதிபலவுமாடிக்
கங்கைகாவேரியாடிக்கண்ணுதல்பாதம்போற்றிப்
புங்கவாபுகழ்ந்துவாழும்பொருநைமாநதியின்மிக்க
மங்களதீர்த்தமாடமருங்குறமகிழ்ந்துவந்தான். (௰௩)

அந்தநற்றீர்த்தமாடியப்பதிமணவைமேவிக்
கந்தரக்கறையெங்கோனைக்கருதிமுன்பணிந்துபோற்றி
வந்தனைசெய்துசெய்யமலரினாலருச்சித்தேத்திச்
சிந்தையில்விருப்பம்வெண்டும்வரங்களுஞ்சிறப்பாய்ப்பெற்றான். (௰௪)

அன்னமெய்வரத்தாற்செய்யவருச்சுனன்விரும்பிச்சென்று
பன்னகஞ்சுமந்தபாரைப்பண்பொடுபரிந்துகாக்கு
மன்னவனவழுதிபெற்றமாதினைமணமுஞ்செய்து
பின்னுமங்கனேகநாளாய்ப்பெட்புறவினிதுவைகி. (௰௫)

நித்தமும்பொருநைநண்ணிநெறிதருகதியைநல்குஞ்
சுத்தமங்களதீர்த்தத்துற்றாயநீரினிற்படிப்
பத்தியினமகிழ்ந்துசூழ்ந்துபரமனைப்பணிந்துபோற்றி
யத்தலத்தரசனாடுமளவளாயிருக்குநாளில். (௰௬)

முன்னொருகாலந்தன்னின்முகியகந்திருவன்றன்னைத்
தனனியவிடங்காரகெனரோர்முனிசாபஞ்சொன்னா
னன்னவனசாபத்தாலேயங்குயாமுதலையாகி
மனனுநீர்பபொருநைபூடுமருவியேவளருநாளில். (௰௭)

மூந்தவம்முனிவன்சொன்னசாபமோசனமாங்காலம்
வந்தருச்சுனனுமாங்கேமங்களதீர்த்தமாட
வெந்துறறபகுவாயனமீனமிகையொடுமலர்த்தாள்பற்ற
வுற்றியகோபத்தாலேதடியவவ்வுருவநீங்கி. (௰௮)

தேவகந்திருவனாகிச்சிறந்தெதிர்போற்றிநின்று
காவலனாபார்த்தன்கருத்துவந்திடவேவாழ்த்தி
மேவுதன்செய்திசொல்லிவிடைகொண்டுமீண்டுபோந்து
வாவுநீர்ப்பொருநைபூடுமங்களதீர்த்தந்தன்னில். (௰௯)

பங்குனித்திங்கடன்னிறபரிவொடுதீர்த்தமாடி
மங்களேசுரமுக்கண்ணனமலரடிபணிந்துபோற்றி
யங்கணாருளான்முன்னையருவினைதொலையநீங்கிச்
சங்கரன்கயிலைதனனிற்சார்ந்தனன்விஞ்சைவேந்தன். (௨௰)

மருவியவிசையளித்தமங்களதீர்த்தமாடி
யருகிலோர்புதியலிங்கமமைத்தருச்சனைகள்செய்து
முருகவிழ்கோதையோடுமுடிவிலாவரங்கள்பெற்றுத்
திருவளர்செல்வமோங்குந்திருநாடுசென்றுசேர்ந்தான். [உக]

மற்றுமிவ்வுலகிலுள்ளோர்மகிழ்வினிற்றீர்த்தமாடி
கற்றறிவுடையோர்போற்றுங்கடவுளையிறைஞ்சுவோர்கள்
பற்றுவல்வினைகணீங்கிப்பரிவுறுசெல்வஞான
முற்றநல்லின்பமெய்தியுறுகதியினைச்சேர்வாரால். (உஉ)

மெய்ப்புறுபொருநைத்தீர்த்தம்விளங்குமித்தீர்த்தமேல்பாற்
செப்பறைத்துறையினையதிச்சிறந்திடுதைபூசத்தி
லப்புனலாடியெங்கோனடியிணைதெரிசிப்போர்கள்
கப்புயர்சூலதண்ணல்கயிலையிலினிதுவாழ்வார், (உங)

மன்னவன்முழுதங்கண்டராமனுக்காகவந்து
துன்னுநெல்வேலிலிங்கநதுணையடிக்கமலம்போற்றி
மின்னிடைவடிவைபோற்றிவிளங்கமுகுடையகூத்தா
தன்னடிபணிந்துபோற்றிநசாரூபம்பெறுவர்தாமே. (உச)

இந்தமங்கலமாநதீர்த்தசதியல்பினையுரைத்தோமிப்பால்
வந்துறுபிதிர்தீர்த்தத்தின்மகிமையைச்சொலவோமென்றே
சிந்தையாஞ்பொருவியாதன்சுகனுக்குச்செப்புகாதை
சுந்தரமறையோர்கேட்பசூதமாமுனிவனசொல்வான். [உரு]

மங்களதீர்த்தசருக்கமுற்றும்.
ஆகத்திருவிருத்தம்-தளசுஅ

---

## பிதிர்தீர்த்தச்சருக்கம்

கானலர்விரியும்வாவிக்கயல்குதிபாயுநதோறுந
தேனலர்கமலத்தூடுசெறிவரிவண்டுதாவும்
பானல்வாய்விளரிபாடப்பழனங்கள்பணிலமூரு
மானிலம்புகழவோங்கும்வளம்பெறுமழகர்கோயில். (க)

நீள்கழைவனங்கள்சூழுநிறைகழைவனங்கள்சூழும்
பாளையிற்குலைகள்சூழும்பசுங்கதிர்க்குலைகள்சூழுந
தாளுயர்குவளைசூழுநயங்குவைக்குவளைசூழும்
வாளரவமளிமீதுவளருமாலழகர்கோயில். (உ)

தேங்கமலங்கள்செய்யதெரிவையர்வதனங்காட்டும்
பாங்குயர்பூகமின்சொற்பாவையர்கிரீபங்காட்டுங்
கோங்குயர்கொங்கைகாட்டுங்கொடியிடைமருங்குகாட்டு
மாங்குயில்கூவுஞ்சோலைவளம்பெறுமழகர்கோயில். (ங)

அருமறைமுனிவர்யோகரமரர்விஞ்சையராய்நதோர்கள்
கருதியவிருப்பின்வந்துகமலத்தாள்வணங்கிவாழ்த்தத்
திருமறுமார்பன்கண்ணன்செகம்புரந்தருளுமாயன்
மருவியிப்பதியிலென்றுமகிழ்ந்தினிதிருப்பதாமால். (௪)

சந்தனச்சோலைசண்பகாடவிதழைத்தசோலை
கொந்தலர்சோலைசூழுங்குற்றாலவனையினமேவுஞ்
சிந்துவெண்டிரைக்கைச்சித்ராநதிதிகழ்பொருநையாறதில
வந்துடன்கூடலாலேவளருமுக்கூடலாகும். (௫)

இன்னமுக்கூடலாடியிசைந்திடும்பிதிர்தீர்த்தத்தின்
முன்னிவந்தினிதமூழ்கிமுகுந்தனபதியினவாழும
பன்னகசயனமாயன்பதமலர்தெரிசிப்போர்கள்
மன்னிநீங்காதெந்நாளும்வைகுந்தமதனிலவாழ்வார். (௬)

கோயிலகமைத்திலிங்ககோதண்டராமனென்று
தாயினுமினியராமனாறுவிஞலமதசதீர்த்தங்
காயமீந்தோங்குசோலைகயத்தாறுவருமுந்கூட
னேயமாயமூழ்குவோர்கணெறிதருமுத்திசேர்வார். (௭)

அன்பொடுபிதிர்தீர்த்ததிலாடிபபிண்டோதகங்க
ளின்பமாஞ்செபதவங்களியறறிடிலொன்றுகோடி
முன்புசெயபவங்கணீங்கிமூவேழுமரபிலுள்ள
தென்புலத்தோருமுய்யச்சிவனடிககமலஞ்சேர்வார். (௮)

இந்தநறறீர்த்தத்தென்பாலிலகுதெககணதீர்த்தத்தில
வந்துநீராடிச்சென்றுவளருக்கிரோசர்தம்மைச்
சிந்தையினினைந்துபோறறித்தெரிசிப்போர்துதிசெயவோர்கண்
முந்துதீவினைகணீங்கிமுத்தியையடைவார்தாமே. (௯)

இத்தலத்தடுத்ததென்பாலெழில்வியாக்கிரமதீர்த்தம
வித்தகமுனிவருரும்வியாக்கிரபாதன்மூழ்கி
யத்தன்வாழ்கயிலைநாதனடியிணைபணிந்துபோற்றி
முத்திபெறறுயாந்தானங்ஙனமூழ்குவோர்முத்திசேர்வார். (௰)

மறைமொழிவியாசதீர்த்தமகிழ்வொடுவியாசன்மூழ்கி
யறிவொடுவியாசராசப்பெருமாடனடியைப்போறறி
நெறிதருவரங்கள்பெறறுநேசமாயத்தொழுதுபோந்தான்
முறையினீராடிச்சென்றுசேவிபபோர்முத்திசேர்வார். (௰௧)

பெருகுநற்கதியைநல்கும்பிதிர்தீர்த்தமுதலாயிங்ஙன்
வருதீர்த்தமகிமைசொனனுமறைபுகல்வியாசனின்பர்
தருசுகமுனிக்குமுன்னஞ்சாறறுவைகுண்டமேனமை
சுருதிமாதவரோசொல்வேனென்றுயர்சூதன்சொல்வான். (௰௨)

பிதிர்தீர்த்தசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்-௲௱௫௯

## சீவைகுந்தச்சருக்கம்

திருவளருங்கோகனகஞ்செறியிலவந்திகைசூழும்
பொருவைநதிபுனல்சூழும்பூஞ்சழனிபுடைசூழும்
பருதிகுரகதநுழைந்துபசியநிறம்பெறவோங்கு
மருவளர்பூஞ்சோலைசெறிவைகுந்தமாநகரம். (௧)

செந்துவர்வாய்வனிதையர்கள்சிலைவடிவிளொளிகாட்டுஞ்
சந்திரகாந்தத்தினுயர்தமனியஞ்சூழ்மணிமேடை
கந்தடுசிந்துரச்சாலைகந்துகங்கண்மணிச்சாலை
மந்திரங்கணிறைவீதிவைகுந்தமாநகரம். (௨)

முதிர்கனிகளருந்திமுசுமுனிகளொடும்விளையாடும்
பதியினுயர்பூஞ்சோலைபாங்குயர்பூஞ்சோலையெல்லாம்
புதியமலர்நறவருந்திப்படையினுறுபெடையினோடு
மதுகரங்களிசைபாடும்வைகுந்தமாநகரம். (௩)

சங்கினங்கண்முத்தீனுஞ்சாலிமணிமுத்தீனும்
பங்கயங்கள்கடைசியர்கள்பணைகடொறுங்களைகளைவார்
கொங்கலர்பூகதச்சோலைகுயில்கூவமயிலாலு
மங்களமாளிகைசூழும்வைகுந்தமாநகரம். (௪)

ஆதிமுனிவோர்சோலையநந்தணைராசமசாலை
வீதிநெடுநெதோரணங்கண்மிகமுழங்குமாரணங்க
ணீதிவளராலயங்கணீண்டமணிக்கோபுரங்கண்
மாதுதிருமகளோங்குமவைகுந்தமாநகரம். (௫)

இந்தநகர்தனிலுறையுமிமையமயிலொருபாகா
கந்தரமெய்க்கறையுடையார்கயிலாயநாயகனை
வந்துமலரடிபணிந்துமதுமராலருச்சிப்போர்
சிந்தையுறுதுயர்நீங்கிச்சிவனடியைப்பெறுவாரால் (௬)

மாதவன்மாயவன்முகுந்தன்வைகுந்தையெம்பெருமான்
சீதரன்வாமனன்கண்ணன்றிருமார்பனடிபரவிக
காதலொடுதொழுவோர்கள்களிப்பினொடும்வளமோங்கி
மாதுதிருவைகுண்டமமர்ந்தினிதுவாழ்வாரால். (௭)

தேவர்முனிவரர்யோகர்சித்தர்திசைகாவலர்கண்
மேவுமிசைவிஞ்சையர்கள்விரும்பியனுதினம்போற்றிக்
காவல்புரிகடவுளைக்கனிவினருச்சித்தேத்திச்
சேவைசெய்துபதம்பணிந்துசிறந்தகதியினைச்சேர்ந்தார். (௮)

இன்னதொருவைகுந்தத்தீர்த்தமதிலெவரோனு
மன்னியிவிதாடிவந்துமகிழ்வினொடுமாயவனைப்

பின்னை தணவனைக்கள்ளப்பிரானை படிதொழுவோர்கள்
முனைனிநெறியினராகிமுத்தியினைப்பெறுவாரால். (க)

இத்தகையவைகுநதத்தீர்த்தத்தினியல்புரைத்தோம்
வித்தகநற்சுகமுனிகளுவேதவியாசன் கூறுங்
கர்த்தர்காநதீசுரத்தினகாதையினைக்கேளுமெனச்
சுத்தமுனிவரர்தமக்குச்சூதமுனிவரனுரைப்பான். (௰)

சிவைகுந்தசசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம் ஆளசுரு.

---

## காந்தீசுரச்சருக்கம்.

மருவியசோலைதோறுமட நதையரூசலாடுங்
குருமணிமேடைதோறுங்குலவியமயில்களாடு
மிருவிசும்பிடையேநீடுமிடககியமாடுமெங்குஞ்
சுருதிகண்முழஙகுங்காந்தீசுரமெனுநகரமாகும். (க)

சாலநீள்குமுதமூரருமணாவதனஙகாவி
சேலிருவிழிகளுபிதிகழசுழிசைவலங்க
ளேலவாாகுழலிவ்வாறங்கிலகியவாவியெல்லாந
தோகையர்க்கிணைசொல்காநதீசுரமெனுநகரமாகும். (உ)

வரிவிழிமடவார்செங்கைமலரொனவாவிதோறும்
விரிமலாக்கமலங்காட்டவிண்டசெங்கோடல்வெள்கு
மருவளாதேவதாருமலரிஞலருச்சிததன்பாயச
சுராபணிநதேதஞுஙகாநதீசுரமெனுநகரமாகும். (௩)

பார்நிறைவளங்களோங்கும்பழனங்கள்சாலியோங்கு
நீர்பணைமருதமோங்குநெய்தனிததிலங்களோங்குங்
காரிருளகலச்சூழுங்கதிர்மணிமேடைதோறுஞ்
சூரியனொளிசெயகாநதீசுரமெனுநகரமாகும். (௪)

சிலமாதவர்கள்சாலைதேவவிஞ்சையர்கள்சாலை
சாலவேதியர்கள்சாலைதமனியவேள்விச்சாலை
மேலுயர்யோகசாலைவீதிகடோறுமோங்குஞ்
சூலனூர்வாழுங்காநதீசுரமெனுநகரமாகும். (ரு)

பெருத்தநல்வளங்களோங்கிப்பிறங்குமிந்நகரந்தன்னிற்
கருத்தொடுதேவர்யோகர்கடவுண்மாதவர்கள்போகர்
திருத்தியாழ்வல்லோர்நாகர்தினந்தொறுஞ்சேவைசெய்தங்
கருத்தியினருச்சித்தேத்தியவரவர்பதங்கள்சேர்வார். (௬)

முதியவித்தலத்தின்முனருண்முயன்றிடுகதையைச்சொல்வாங்
கதிதருயோகர்தம்பிறகருலூரிறசித்தாநாளும்
பதிதொறுநதிநதாடிபபரகதிபெறவேயெண்ணி
மதியினிலுணர்ந்துபாரத்துமகிழவொடிததலத்துவந்தார்- (எ)

வந்ததன்பொருனையாடிவலங்கொடுசூழந்துபோந்து
கந்தரங்கறுத்தமுக்கட்கடவுளைககண்டுபோறறி
யெந்தையையினிதுவாழ்ந்துயிருகண்ணீர்சொரியநின்று
சிந்தையுட்கனிந்துநாடிச்சிவயோகஞ்செய்யவெண்ணி- (அ)

சன்னிதிமருங்கிலோர்பாற்றகவொடுமிருந்தியோகரு
சொன்னவம்முறையேசெய்துசோதிநாயகனைத்தூய
பன்னகபணியினானைப்பரமனைபபலாயினோடு
முன்னிநெஞ்சிருந்தியோகமுலபஞ்சுடபுரிபுங்காலை- (௯)

அருகுயர்மகாலிங்கத்திலாயிரகோடிகோடி
பருதியகருதையம்போலும்படொரொளிபரந்துதோனற
மருவுமுக்கண்ணுமாறுமமுவுநுசெங்காமுமெய்புங
கருலூரிறசித்தாகாணககாட்டிருனகருணைநாதவை- (௰)

கண்டனர்கருலூர்சசித்தர்காஞ்சிரமீதுகூப்பிக
கொண்டபேருவகையேகெடுகுமுகனைபபரிவுபோற்றி
யண்டர்நாயகனைசசோதியானாதவடிவிருனைத
தண்டவெண்பிறையினானைததொழுதுதோததிரஞ்செய்வார- (௰௧)

எழுந்தநாண்மலாபபுங்கொன்றையிலகொளிவெண்ணிலாவின
கொழுந்தணிவேணியானேகோதிலாக்குணத்தினானே
தொழும்புசெய்யடியாருள்ளசசோதியேசுடரோயென்று
மழிந்திடாப்பொருளேயாதியமலனேயரனேபோற்றி- (௰௨)

திரிபுரமெரிக்குநாளிறதிருமகளகொழுநனசேவாய
மருவியுன்பாதந்தாங்குமவரதனேமழுவலானே
யிருவினையகத்தனுகியினபதுனபந்தொமுந்து
கருவினிலுருமலென்னைககாததிமுக்கண்ணினானே- (௰௩)

என்றுநற்றுதிகள்செய்லியிணையடியினைறஞ்சியேதி
நின்றிசைபாடியாடிநினைந்துளமுருகிபபோற்றித
தன்றுமெய்ச்சோதியாகததோன்றலாலிந்தவூர
கன்றுநின்பெயருநகாந்திசுரமெனகவிலவேணடும்- (௰௪)

மற்றுநல்வரங்களெல்லாமகிழ்வொடுபெறறும்மாயை
யுற்றிடும்வினையுநீங்கியுயர்கதியடையும்பேறு
பெற்றுயர்கருலூர்ச்சித்தர்பிறங்கொளியுருவத்தோடு
கற்றைவார்சடையார்காந்திசுராடிக்கமலஞ்சேர்ந்தார- (௰௫)

இத்தகையிலிங்கந்தன்னிலெழுந்தநற்சோதியாலுஞ்
சித்தனூர்கருளூர்ச்சித்தர்சிறந்துறவாற்றினாலு
மத்தலம்பொருநைத்தீர்த்தமானதோர்மூர்த்திபெருஞ்
சுத்தநல்லறிவோர்காந்தீசுரமெனச்சொல்லுவாரால். [௰௬]

இன்னதோர்தலத்திலெய்தியாவர்களேனுமன்பாய்
நன்னதிப்பொருநைநீராடிக்கம்பகாந்தீசர்செய்ய
பொன்னடிபணிந்துபூசைபுரிகுவோர்போற்றுவோர்கண்
முன்னியேவலஞ்செய்வோர்களைம்முத்தியையெய்துவாரே. (௰௭)

ஏழுமுக்கண்ணர்காந்தீசுரநகர்மகிமையெல்லாந்
தூயமாதவரேசொன்னேனுஞ்சொன்னவித்தீர்த்தத்தென்பால்
மாயவன்குருகூர்மேன்மைமறைதருவியாதன்கூறு
நேயமாயச்சொல்வேனென்றுநெறியொடுசூதன்சொல்வான். (௰௮)

காந்தீசுரச்சருக்கமுற்றும்

ஆக — திருவிருத்தம் — ௬௱௮௰.

## ஆழ்வார்திருநகரியாகியதிருக்குருகூர்ச்சருக்கம்.

சந்தனிலகற்பகந்தேவதாருமருமந்தாரங்
கொந்தலர்பூஞ்சோலையெல்லாங்கோலவரிவண்டினங்கள்
வந்துமலர்நறவருந்திமலர்ந்துகண்மெய்போர்த்திடலாற்
சுந்தரப்பொற்றுவளைபுனைசுரும்பெனவுமாகுமால். (௧)

சோதிமணிக்கோபுரங்கள்சூழ்ந்தமணிமண்டபங்க
ணீதிவளர்தச்சாலைநெருங்குமணிநீதிச்சாலை
வீதிதொறுமணிமேடைமீதுயர்பொற்கொடியோங்குந்
தீதில்வளம்பெருகவுயர்செல்வமிகுதிருக்குருகூர். (௨)

கார்பயிலுஞ்சோலையெல்லாங்கலைபயிலும்வேள்வியெல்லா
நீர்பயிலும்பழனமெல்லாநெறிபயிலுஞ்சாலையெல்லா
மோர்பயிலுமவீதியெல்லாமிசைபயிலுமியங்களெல்லாஞ்
சீர்பயிலும்பெருவளங்கள்சிறந்தோங்குந்திருக்குருகூர் (௩)

துணிவுகளைப்பலவோங்குஞ்சூடாமணிமாடந்தோறும்
வாணுதலார்கழங்காடவாய்ந்தவிழிக்கழங்கார்
நீணெடுமறுகின்மணிக்குடங்கணிரைப்பார்கண்மணிக்குடங்கள்
சேணுயர்பச்சிளநீரார்திருவளருந்திருக்குருகூர் (௪)

மன்னிநிறைபூமரங்கள்வளர்சோலைபுடைசூழ்ந்து
மின்னினிடையரம்பையர்களவிண்ணோர்களமிகநெருங்கி
யன்னவர்நிறைபொருநைநதியாரமுதமாடுவார்
பொன்னகரம்போலோங்கும்புகழ்பெருகுந்திருக்குருகூர். (௫)

இத்தகுநல்வளஞ்சிறந்தவிந்நகரிலினிதுறையு
நத்தணிசெங்கரநாராயணர்நான்முகன்றன்றாதை
புத்திரமுதினுடன்பிறந்தபூவையுறைமணிமார்பர்
கொத்தலர்பைந்துளவணியுங்கோகனகக்கோவுடையார். (௬)

ஆதியுலகனைத்தினுக்குமமரருக்குமியாவருக்கு
நீதியொடுநல்வளங்கணிலைபெறவேகொடுத்தருளி
மாதுதிருமகள்மார்பின்மகிழ்ந்திருப்பவீற்றிருக்குஞ்
சீதரனார்கருணையினாற்சிறந்துவளர்திருக்குருகூர். (௭)

பொருநைநதித்தென்கரையிற்பொருந்திய சக்கரதீர்த்த
மருவியதின்மூழ்கியிந்நமாயவனைத்தொழுதேத்தித
கருதியருச்சனைபுரிந்துகணுசமலாதநாள்பணிவோ
ரிருவினையின்றொடர்நீங்கியென்றுமவர்பதமடைவார். (௮)

கருத்திசைந்துமகிழ்திருச்சங்கணித்துறையினீராடி
யருத்தியுடனுழ்வாரையாதிநாராயணனை
மருத்தருபொன்மலரொடுத்துமலரடியினருச்சிப்போர்
திருத்தகுவைகுண்டமிசைச்சேர்ந்தினிதுசிறப்புறுவார். (௯)

வேறு.

அத்திரிபிருகுதேவனகத்தியனுயாமரகண்டன
பத்திசெயமுனிவர்செய்யபங்கயமாதும்பண்பா
யித்தலத்தெய்தியிந்தத்தீர்த்தங்களினிதினாடிச்
சித்தமதுவந்துமாயன்சேவடிபணிந்துவாழ்ந்தார். (௰)

இந்திரற்றீர்த்தக்கீழ்பாலியல்புறுபஞ்சகேதா
மந்தரற்றீர்த்தமாடியகமகிழ்ந்தாதிநாதன
சுந்தரக்கமலபாதந்தொழுதுதோத்திரங்கள்செய்வோர்
வந்துறுபவங்கணீங்கிவைகுண்டமதனில்வாழ்வார். (௰௧)

தவமிகுசுகர்க்குமிக்கதந்திருநகரிமேன்மை
புவிபுகழ்திடவிடாதனபுக்னறவாற்றைத்தேனிப்பா
லவிரொளிமணிக்கண்சிரத்துமலைகிபபொருநைத்தென்பா
னவலிங்கபுரத்துமேன்மைநயிலவனென்றினிதுசொல்வான். (௰௨)

திருநகரிச்சருக்கமுற்றும்.

ஆக—திருவிருத்தம்—௩௭௬.

---

## நவலிங்கபுரச்சருக்கம்.

பலந்தருபதியாமிந்தப்பதிக்குநேர்கிழக்கதாகு
நிலம்புகழ்திடவேயோங்குநீடியசோலையோங்குங்
குலந்தருகுடிகளோங்குங்குலவுகோபுரங்களோங்கு
நலந்தருவளங்களோங்குநவலிங்கபுரமதாகும், (௧)

கொந்தலர்சோலைதோறுங்குளிர்புனற்சுனைகளாடிப
பந்தொடுகெழுங்குமாடிப்பணிமணிச்சிறநிலாடிச
சுந்தரவனிதைமார்தாந்தூயபொன்மேடைசூழ
நந்தணிகுழையார்வாழுநவலிங்கபுரமதாகும். (௨)

விஞ்சையர்வீணையோதைவிபஞ்சியேவேளவியோதை
வஞ்சியாரடிகருமோதைமணிநிறைமேடைதோறும
கஞ்சனைபதிக்குமோதைகடலொலிமுழக்கமாகு
நஞ்சணிகண்டர்வாழுநவலிங்கபுரமதாகும். (௩)

இத்தலமதனிற்றேவரினியகந்திருவார்யோகா
சுத்தனமுனிவர்வாழ்தூயசீர்பொருநையாடி
நத்தணிகுழையர்சீரநவலிங்கநாதர்தமமைப்
பத்தியாற்சேவைசெய்துபதமலர்பணிந்துவாழ்வார். (௪)

அதிசயதலமென்றெண்ணியானதோர்நவதீர்த்தங்கள்
கதிதருபொருநைமூழ்கிகனிந்துதென்கரைமேலவந்து
புதியநவலிங்கத்தைப்பூசனைபுரிந்துபோற்றி
விதிமுறைபணிந்தேநாமும்விரும்பியதீர்த்தம்வைகும். (௫)

நந்திடாதோங்குமிந்தநவதீர்த்தமதனைநாடிச்
சிந்தையனபாயமுகக்கோடிபனைக்கோடிதீர்த்தமெல்லாம்
வந்துற்றனுமாதத்தினம்பூந்தினிதாடித்தங்கள்
முந்துறுதயவாற்போற்றிமுறைபணிந்தேகுமன்றே. (௬)

இன்னதோர்நவதீர்த்தங்களினியதண்பொருநைதென்பால்
முன்னியங்கிருப்பதாகுமுறைமுறைமூழ்கிவந்தே
துன்னுமொன்பானிலிங்கந்தொழுதுநற்றுதிசொல்வோர்கள்
பொன்மலரொடுத்துப்பூசைபுரிகுவோர்கயிலைவாழ்வார். (௭)

மற்றுமத்தீர்த்தந்தனினமாசகழித்திங்களெய்திப
பற்றொடுமினிதுமூழ்கிப்பரிவுறநவலிங்கத்தை
யுற்றடிபணிந்துபோற்றியுணர்வொடுமருச்சிப்போர்கள்
செற்றவர்புரங்கள்செற்றோர்சேவடிக்கமலஞ்சேர்வார். (௮)

இன்னதாநவதீர்த்தத்தினியல்பினைச்சொன்னோமிப்பால்
மன்னுதண்பொருநையாற்றின்மருங்கிருபாலும்வைகு
தென்னுயர்சோலைசூழ்ந்திருப்பதியொன்பதாகு
மந்நகர்தோறுமென்றுமாதிமாலிருப்பதாகும். (௯)

வேறு.

மருமலர்புனைதிருவைகுந்தைக்கள்வரைரநுணமங்கையிலெம்பிடர்கடிவார்
கருதுமெய்ப்புளிங்குடிக்காசினிவேந்தர்கதிதருமாயன்றேவர்களிருவர்
திருமகிழ்பேறைமகரக்குழையார்திருக்கோளூர்வாழுமவைத்தமாநிதியார்
பெருகுபெருங்குளமாயக்கூத்தர்பிறங்குகுருகூராதிநாதருமே. (௰)

இவ்வகைமுறையேதிருப்பதியொன்பதுமினியதண்பொருநையிற்றீர்த்தமதாடிக்
கவ்வையதகன்றங்கொருதினமதனிறகனிவுறமுண்டிகசப்பெணீததுத
திவ்வியகருணைமாயவன்றன்னைச்சேவடிக்கமலஞ்சேவைசெய்திடுவோர்
வெவ்வினையகன்றுதிருவினைப்பெற்றுவிருப்புடன்வைகுண்டமேவியங்கிருப்பார்.

விருப்புறுமேகாதசியினிலன்றுவிரதமாயிருந்துவிளங்குபின்னுளி
லொருப்படவருதுவாதசியினன்றுமுறறுநறபொருநையிலினிதொடுமூழ்கித்
திருப்பதியொனபதுமத்தினமதனிறசென்றுயர்திருமலரடிதெரிசிப்போர்
கருப்படுபிறவிக்கடற்கரையேறிக்கண்ணனவைகுண்டங்கண்டினிதிருப்பார். (௰௧)

ஆனதோர்பதிகளொன்பதின்மேன்மையறிவுடையவரோயறிந்தவாறுரைத்தோ
ஞானநற்சுகர்க்குவேதவியாசனலம்பெறவுரைததனைநடியங்கதுபோற்
பானலார்பொருநைதென்கரைமீதுபரிவொடுபரம்பொருளினிதுவீற்றிருக்குங்
கானலர்சோலைசூழ்பிரமேசாகதைமகததுவமதுகனிவொடுசொல்வாம் (௰௨)

நவலிங்கபுரசசருக்கமுறறும்.

ஆக--திருவிருத்தம்--௩௮௱௮.

---

## பிரமேசுரச்சருக்கம்

பொருவில்சீர்வளங்களோங்கும்பொருநைமாநதிகருததென்பான்
மரபின்மிக்குயர்நதவேதமறையவர்வாழூருதனர்
விரிசிறைத்தும்பிபாடவிரைமலர்முகிழ்ம்விள்ளும்
பிரசமார்சோலைசூழும்பிரமேசநகரயாகும். (௧)

நிறைபணைவிளையுஞ்சாலிநீணகர்விளையுநீதி
மறைபுகல்வேள்விச்சாலைமாதவர்வாழுஞ்சாலை
வெறிமலர்ச்சோலைசூழும்விளங்குகோபுரங்களோங்கும்
பிறையணிசடையான்வைகும்பிரமேசநகரமாகும் (௨)

கனிமலருதவவேட்குங்காளவர்தானம்வேண்டிப்
பணிமணியுதவுவார்கள்படர்புகைச்சாலைமாலை
யணிபெறுகுயிலைப்போதுமந்தாரத்தெழுவகண்டு
பிணிமுகாடிக்குஞ்சோலைபிரமேசநகரமாகும். (௩)

இந்நகல்வளங்களோங்கியெழில்பெறுநகரந்தன்னிற்
கந்தன்மலர்வாழ்வேதன்கருதியகருமஞ்சொல்வாஞ்

சிந்தையிலரனையெள்ளிச்செய்திடுதக்கன்வேள்வி
மந்திரசாலைதன்னின்மான்முதற்றேவரோடும். (௪)

தாமரைவதியும்வேதன்றானுமங்கணைந்ததோட
மாமதுதீரவெண்ணியருந்தவம்பலவுஞ்செய்து
மோமவேள்விகளைச்செய்துமுறுதுயர்நீங்கக்காணான்
காமனையெரித்தவனணிக்கண்ணுதல்கயிலைவந்தான். [௫]

வந்துயர்கயிலைசூழ்ந்துவரதனாலயத்தைச்சூழ்ந்து
நந்திநாயகனைப்போற்றிநலம்பெறுவிடைகொண்டேகிச்
சுந்தரத்தவிசின்மீதுதுணைவியோடினிதுவைகு
மெந்தையைக்கண்டுபோற்றியிணையடிபணிந்துசொல்வான். (௬)

நித்தனேகருணையானேநிலைபெறுகயிலைவாழு
மத்தனேயரனேநின்னையகந்தையாயநிந்தைசொன்ன
சத்துருத்தக்கன்வேள்விதனிலுனதருளிலாமற்
புத்தியின்றியன்போனபிழையதுபொறுக்கவேண்டும். [௭]

என்றிதுகூறிப்பின்னுமியம்புவாணியைந்தவேள்வி
சென்றிடுபாவந்தீரச்சிறந்துனைநினைந்துபோற்றி
நன்றுயர்பூசைசெய்யநாடினேனுனக்கனபாகி
யொன்றுமத்தலத்தைநல்கென்றுரைத்தனன்கமலத்தோனே. (௮)

அன்னசொற்கேட்டென்னையனஞ்சல்செய்தருளிநீதான்
பொன்னதிபொருநைத்தீரம்போயுயர்கரையிற்றென்பால்
மன்னியங்கெம்மைப்புன்னிமகாலிங்கமமைத்துப்பூசை
யிந்நிலம்புகழச்செய்வாயென்றனனெவர்க்குமேலோன், (௯)

அண்ணலங்குரைப்பக்கேட்டானகமகிழ்ந்தடியைப்போற்றிக்
கண்ணுதற்றனைச்சூழ்ந்துகைகூப்பித்தொழுதுவாழ்த்தி
நண்ணலர்புரங்களகாய்ந்தநம்பனேநாதாவென்று
வெண்ணிலவணிந்தசென்னிவிமலனைவிடைகொண்டேகி. (௰)

அங்குளதலங்கள்போற்றியரியகேதாரம்போற்றிக்
கங்கைசூடிறைவர்வாழுங்காசிமாநகரம்போற்றிச்
செங்கைமான்மழுவார்காஞ்சிபுரஞ்சிவதலங்கள்போற்றிப்
பங்கயன்புலியூர்போற்றிப்பரிந்துகாவேரியாடி. (௰௧)

புனிதன்வாழ்தலங்களெல்லாம்போயினிதுவந்துபோற்றிப்
பனிமதிபுனையும்வேணிப்பரனுறைமதுரைபோற்றிக்
கனிவொடுதிருக்குற்றாலங்கண்டடிபணிந்துபோற்றித்
தனிமுதலினிதுவாழுந்தாருகாவனத்தில்வந்தான். (௰௨)

சிந்துபூந்துறைநீராடித்திருமூலலிங்கநாதன்
சுந்தரமலர்ப்பதாள்போற்றித்தூயவேய்முத்தைப்போற்றி

வந்துநல்வடிவைப்போற்றிமகிழ்ந்துயர்விடைகொண்டேகிப்
புந்தியஞ்பாகிநீண்டபொருநையந்தீரம்போந்தான். [௰௩]

புடையுயர்பொருநைதன்னெபாற்புனிதமாங்கரையின்மீது
நெடிதுயர்சோலைசூழ்நிலமதன்வளங்கள்கண்டான்
கடிகமழ்கொன்றைவேணிக்கண்ணுதல்பூசைக்கான
விடமிதுவென்றுநாடியிலகுமாலயஞ்செயவித்தான. [௰௪]

புனிதனையுளத்திலெண்ணிப்புண்ணியம்பொருநலிங்க
மினிதினிலமைத்துபபோற்றியின்பமார்பொருநையெய்தி
மனவிருப்பதனுலாடிவநதனைபலவுஞ்செயது
நனைமலரொடுத்துவாசநறும்புனல்கடங்கள்வாரி. [௰௫]

நேயநறுநெயிர்பால்செந்தேனெய்குளங்கரும்புதேங்கா
யாயமுபபழங்கணமற்றுமானவைபலவுங்கொண்டு
தாய்பளைகவுரிதன்னைச்சங்கரன்றனையுமாட்டித
தூயனைவேத்யஞ்செயதுதூபதீபங்கணல்கி. (௰௬]

எதிர்நின்றுபோற்றிமறறுமினியவநதனைகள்பண்ணி
யதிர்முழவதிரச்சின்னமார்பபத்துநதுமிகளார்பபப்
புதியசங்கொலிப்பநன்றுய்ப்புனிதனைப்பூசைசெய்து
விதிமுறைபணிந்துபோற்றிவிரும்புதோததிரங்கள்செய்தான். ’௰௭)

மங்கையோர்பாகம்வைத்துவானவர்முதலாயுள்ள
பொங்குமாருயிரையெல்லாம்புரநதனைபுரததைநீறுப்
பங்கமதாககியெங்கள்பயமதுதீர்ததாயிநதத்
துங்கமார்பவத்தைத்தீர்ப்பாய்தூயனேபரனேபோறறி. (௰௮)

ஆதியிலரியும்யானுமகநதையாயப்பொருணீயன்றென்
றோதுமவவெலலையங்கணுற்றெருருதூரும்பைநாட்டிக்
கோதில்பல்புவனமணடகோடியுமதிலுண்டாககி
நீதியிற்றுடைத்துக்காட்டுநித்தனேநிமலாபோறறி. [௰௯]

சனகர்நால்வருக்குஞானந்தனையுணர்த்திடக்கல்லாலின்
முனமிருந்திடுநாளிநதமூதுலகழிவுகண்டு
நனைமலர்வாளியானைநலம்பெறவனுப்பநாடிக்
கனல்விழிகொண்டுகாய்நதகடவுளேபரனேபோற்றி. (௨௰)

வேதனிவ்வாறுசிநதைவிளைவுறுதுதிகள்சொல்லி
நாதனேசிவனேமுக்கணம்பனேயென்றுபோற்றிப்
பாதகமனைத்துநீங்கிப்பளையிருபாதம்போற்றி
மாதவர்சூழநின்றுவரம்பலகேட்கலுற்றான். (௨௧)

இன்னநற்றலம்பிரம்மேசுரமெனப்பகரவேண்டுந்
தன்னியோர்பாகாநீயுங்கருணையோடிருக்கவேண்டு

நன்னதிப்பொருனைதன்னிஞனினிதாடுதீர்த்த
மன்னியபிரமதீர்த்தமெனப்பெயர்வழங்கவேண்டும். (உஉ)

பொருவில்பொன்னுலகர்நாகாபுவியுள்ளோர்முனிவரிந்தப்
பிரமதீர்த்தத்தில்வந்துமூழ்கியேபிரசமூறும்
விரைமலரடியைப்போற்றிவிமலனேயுனைச்செவிப்போ
ரிருவினைநீங்கியென்றுமின்பவீடிருக்கவேண்டும். (உக)

இந்தநல்வரங்களெல்லாமிறையவனருளாற்பெறறுச்
சுந்தரமலர்த்தாள்போற்றிச்சுருதிநாயகனைவாழ்த்திக்
கந்தரங்கறுத்தமுக்கட்கடவுளைவிடைகொணடேகி
மந்திரமறையோர்சூழமன்னுபதிநகரஞ்சேர்ந்தான். (உச)

கனிவொடியாவரேனுங்கதிதருபொருனையாற்றிற்
புனிதமார்பிரமதீர்த்தம்பொருந்திநீராடிப்போற்றித்
தனிமுதற்பிரமவீசர்தாளிணைதெரிசிப்போராக
ளினியபேரின்பமெய்தியிருங்கதியெய்துவாரால். (உரு)

இத்தலத்தடுத்தகீழ்பாலெழில்பெறவின்றுதோன்று
முத்தமிழ்மணக்குஞ்சோமேசுரமுதுநகாக்குமேற்குப
புத்தமுதனையதெண்ணீரபொருனைமாநதியிற்றென்பாற்
சுத்தநற்கரையில்வைகுந்தீர்த்ததினமேன்மைசொல்வாம். (உசா)

இலகுமக்கினியாந்தீர்த்தமின்பமார்தேவதீர்த்தங்
குலவியசங்கதீர்த்தங்கொண்டதோர்தாராதீர்த்த
மலர்மகள்பெயராந்தீர்த்தமருவியவேததீர்த்த
மலரிநல்வாயுவன்னியவிர்நாரசிங்கதீர்த்தம். (உஎ)

இன்னதோர்தீர்த்தம்பத்துமிருக்குமவ்விடங்களெய்திச்
சொன்னவவ்வடைவேசென்றுதூயதீர்த்தங்களாடி
மன்னுமத்தீர்த்தத்தேவர்தம்மையுமனத்துளெண்ணிக்
கன்னியோர்பாகன்றனனைச்சேவிபபோர்கதியைச்சேர்வார். (உஅ)

இத்தகைப்பிரமேசத்தினியல்பினைச்சொன்னேமிப்பால்
முத்தநற்சுகர்க்குவேதவியாசனார்மொழிந்தவாறு
சுத்தநற்சோலைசூழுஞ்சோமேசநகரின்மேன்மை
பத்தியான்முனிவர்கேட்பப்பரிவுறுசூதனசொல்வான். (உகூ)

பிரமேசுரச்சருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம் ருஅருஎ.

---

## சோமேசுரச்சருக்கம்.

சீதமாமலர்ச்சோலையிற்சிறையளிபாடுஞ்
சோதிமாளிகையெங்கணுநதுகிற்கொடியாடும்

பாததாமரைப்பரிசினைப்பழமறைதேடு
நாதனுறினிதுறையுஞ்சோமேசுரநகரம்- (க)

நீள்பொன்மேடைகள்கோபுரமெங்கணுநெருங்குஞ்
சாளரந்தொறுந்தவழ்நடைவசந்தமுஞ்சரிக்கும்
வாள்விழித்திருமங்கையாமணவினைவகுப்பார
நாளுநல்வளமோங்குசோமேசுரநகரம்- (உ)

வீணைவெண்டிரைசிதறுவெண்டரளங்கள்கொணர்ந்து
பாரவெம்முலைப்பரத்தியர்பாகினுக்களப்பார்
காரகிற்புகைகமழ்மணிமேடைகடோறு
நாரியர்கழங்காடுசோமேசுரநகரம் (ங)

பண்ணைதோறுஞ்செஞ்சாலிகள்வளர்வனபணைசூழ்
கண்ணுலாவுசெங்கழைகளுநசழுனியில்வளரும
பெண்ணைதோறும்வாழ்கிரவுஞ்சபரிபரண்டமோங்கு
நண்ணுமாலயஞ்சூழுஞ்சோமேசுரநகரம்- (ச)

ஆலையாட்டுவோரமலையுமமருக்கவியைச்
சாலையூட்டுவோரமலையுமுகிலொலிதழைக்கும்
வேலையார்பபெனப்பனவர்கள்வீதிகடோறு
நாலுவேதமுமுழங்குசோமேசுரநகரம்- (ரு)

இந்நல்வளம்பொருந்தியநகரிடையிசைந்த
சுந்தரம்பெறுகதையினைவரன்முறைசொல்வாஞ்
சந்திரன்குருபன்னியைத்தகவொடுவிரும்பிச்
சிந்தையன்பினிற்கூடிடத்தேசிகன்சினந்தான- (சு)

ஆவலாய்ப்புணர்தறிவிலாவவலனேநீதான
மேவுவாயுயர்சயமெனும்வியாதியையென்றே
தேவர்தங்குருசசபித்தனன்சபித்தலுஞ்செறிந்த
நோவுவந்துமெய்பொருந்தலுநொந்துடன்மெலிந்தான் (எ)

கொந்தசிந்தையனுயவலிவசத்தனாய்நுணங்கிப
புந்தியஞ்சினன்பொருமினன்புகாயினைத்திரபபா
னெந்தையெண்புயனேற்றினனிமையவர்க்கிறைவன்
றந்திபோர்த்தவன்சங்கரன்றனைநினைந்தான- (அ)

விதிவசத்தினுனுய்கொண்டுவெதும்பியமதியோ
னதிமுடித்தவனுறைதிருக்கயிலையைநண்ணி
முதியவெள்ளியங்கிரியினைமுறையினுற்சூழ்ந்தன்
கதிவிருப்பினுனந்தியையடிதொழுதேகி- (கூ)

புனிதமிக்கபுராதனிபார்வதிபுனிதக்
கனிமொழிப்பனைகவுரியோர்பாலுறக்கனிந்தே

யினியநன்மணிசிறந்தசிங்காசனத்திருக்குந்
தனிமுதல்வனைச்சந்திரன்கண்டடிதாழ்ந்தான். (௰)

தாழ்ந்தெழுந்தெதிர்நின்றுகைகூப்பியேதவா
யாழ்ந்தபேரன்பினகங்குழைந்தமலனைப்புகழ்ந்தே
சூழ்ந்துபோற்றினன்றுணையடிபரவினன்சூழ்ந்து
வீழ்ந்தசெஞ்சடைப்பரமவென்றிவைவிளம்புவனால். (௰௧)

அத்தனேகுருசாபத்தாற்றுயினிலழுந்தி
மெத்தநொந்தனனினியருள்புரிந்திடவேண்டு
நித்தனேயுனைப்பூசைசெய்திடமனநினைந்தேன்
பத்திசெய்யுநற்றலமதுபணியெனப்பணிந்தான். (௰௨)

அண்ணலம்மொழிகேட்டலுமவனையேநோக்கிப்
புண்ணியநிறைபொருநையாற்றீரத்திற்போயநீ
யெண்ணிநம்மையங்கிடல்பினிலருச்சியிந்நோய்போய்
விண்ணினமுன்புபோலவிளங்குவையெனலுமறைந்தோன். (௰௩)

கருணைநாயகனடியிணைக்கமலங்கள்போற்றி
விரவுகாதலிற்றொழுதுநலவிடையதுகொண்டே
சுருதிசூழ்திருக்கயிலையைவலங்கொடுசூழ்ந்து
பொருவிலங்குறைதலங்களிற்புனிதனைப்போற்றி. (௰௪)

மற்றுமிக்குயர்தலங்களைவரன்முறைவணங்கிக்
கற்றைவார்சடைக்கண்ணுதல்காசியைத்தொழுதே
கொற்றவன்றிருப்பெருந்துறைகோலகாருத்தலா
யுற்றாற்சிவதலங்களையுணர்ந்துசேவித்தான். (௰௫)

கருதிவந்துகாவேரியைக்கண்டுநீராடிக்
திருவிடைமருதூருபாசிராப்பள்ளிதொழுதா
ளருகுசூழ்ந்துவெண்ணெய்வலூரானைக்காவாதி
வரதன்வாழிடமெங்கணுஞ்சேவித்துமகிழ்ந்தான். (௰௬)

மதுரைமாநகர்வந்தனன்வைகைநீராடிக்
கதியைநல்குமெய்யாலவாய்ச்சுந்தரன்கழலை
விதியிற்போற்றிமீனாட்சிதாள்போற்றியேமீண்டு
பதிவிரும்புகுற்றாலர்பொன்னடியிணைபணிந்தான். (௰௭)

உம்பர்போற்றுநெல்வேலியினுமையொருபாகன்
செம்பதாம்புயச்சேவடிதெரிசித்துப்போற்றி
யம்பிகைவடிவாளடிக்கமலமும்போற்றிக்
கம்பைசூழ்சிந்துபூந்துறைக்கமலத்திருவடி. (௰௮)

பொருநைமாநதிச்சிவதலமெங்கணும்போற்றிக்
கருதுதென்கரைமருங்குயர்கமழ்நறுஞ்சோலை
மருவுமத்தலத்தெய்தியவ்வளங்களும்பார்த்தங்
கருகுசென்றுநறநீராத்தத்தினகமகிழ்நதாடி. (௧௯)

வந்துநம்பர்சோமேசனைவாழ்த்தியேவணங்கி
யெநதைமுக்கணனிறையவனேழைபங்காளன்
கந்தரக்கறைமிடறினன்கருணையங்கடவுள்
சுந்தரற்கபிடேகஞ்செயதிடதொடங்கினனால். (உ௰)

கணிப்பிலெண்ணைநெய்பாறயிர்கனிவுறுசெந்தேன
பணிப்படுத்திளநீர்நறுங்கன்னன்முப்பழங்கள
பிணித்தபன்மலர்மாலைகள்பிறங்குகறபூர
மணிக்குடஞ்செறிவாசநீரிவைகொடுவநதார். (உக)

மற்றுமுள்ளவுங்கொடுவரக்கொடுவரவாங்கிக்
கற்றைவார்சடைக்கண்ணுதலகனிவுறவாட்டிப்
பற்றிநன்குநைவேதனம்பரிவினிறபண்ணிக
குறறமினனறுந்தூபதீபங்களுங்கொடுத்தான். (உஉ)

பூசைசெய்துசோமேசுரநாதனைப்போற்றி
நேசமாய்ப்பனைகவுரியைநெறியொடும்போற்றி
யாசிலாலயம்வலங்கொண்டுசூழநதவணைநது
தேசிகன்னெதிர்நின்றுநறறுதிகளசெபபுவனால். (உ௩)

அரவகங்கணமரையினிற்புலியதழாடை
விரிதிரைச்சடைமேனியிலக்கம்வெண்பூதி
புரிமணிக்குழைபூண்டுபொறகொன்றையும்புனைநதோய்
கரியுரித்தசோமேசனேகடவுளேசரணம். (உச)

வினைசெய்வெங்கடுங்கோபியர்வேதியர்வேள்விக்
கனறரித்தசெங்கையனேகனகவில்லானே
யனையதாபதர்மாலயனமரரைக்காத்துப்
புனறரித்தசோமேசனேபுனிதனேசரணம். (உரு)

விதிமனக்குறும்படக்கவெண்டலையினைவேய்ந்து
கதிர்வளைக்கைமான்மெய்யிற்கங்காளமுங்கவாநதோய்
துதிசெய்தொண்டருக்கின்பமார்துணைப்பதமளிதது
நதிமுடித்தசோமேசனேநம்பனேசரணம். (உசு)

வெறிமலர்க்கணைவேள்செயும்வெம்மையான்மெலிநது
நெறியிழந்திடநினைந்திடுசாபத்தானுந்தே
னறிவிலேன்செய்தபிழைபொறுததருள்வதேகடனா
மதிதரித்தசோமேசனேவரதனேசரணம். (உஎ)

தொழுதுதோத்திரமிப்படிபலவுமேசொல்லிப்
பழுதில்சந்திரன்பரிவொடுதாம்பிரபன்னி
முழுகிநாடொறுமுயறவமுயன்றவணிருந்து
மழுவலாளனையருச்சித்துவழிபடுநாளில. (உஅ)

என்னையாளுடைநாயகனெதிருறத்தோன்றி
மன்னுநோயினைத்தீர்த்தனமனத்துறுவரங்கூ
டன்னைக்கேளெனச்சந்திரன்சயப்பிணிநீங்கி
முன்னாநின்றுகைகூப்பி யேதொழுதிவைமொழிவான். (உகூ)

ஏயுமித்தலந்தீர்த்தநின்பெயருமெநநாளுந்
தூயதானசோமேசுரமெனச்சொலவேண்டு
நீயுமித்தலநீங்கிடாதுமையொடுமிருந்து
மேயநல்வரமளித்துயிர்காத்திடவேண்டும். (௩௦)

என்றுகேட்டநல்வரமிவைவிதுவினுக்கீந்து
துன்றுசோதிலிங்கததிடைத்தூயவன்மறைந்தான்.
கொன்றைசூடியகுழகனைக்குடிலைநாயகனை
நன்றுசூழ்நதுநல்விடைகொண்டுகயிரவநண்பன். (௩க)

வரங்கண்மற்றவுங்கேட்டவைமகிழ்வொடுபெற்றுப்
புரங்கள்செற்றவனடியினைநினைந்துளம்போற்றிச்
சரங்கொண்மானத்திலேறியேதாரகைசூழக்
✠குரங்கிவானிடையேகித்தன்கோநகரடைந்தான். (௩உ)

இன்னதன்மையவாகியசோமதீர்த்தத்தின்
மன்னிமூழ்கிச்சோமேசனாமலரடிவணங்கிப்
பன்னுநாமமும்பகருவோர்பழவினைநீங்கிக்
கன்னிபாகர்முக்கண்ணனூர்கயிலையில்வாழ்வார். (௩௩)

கதியைநல்குசோமேசுரர்கதையினைமொழிந்தோம்
விதிவியாதனூர்சுகனுக்குவிளம்பியவாறு
முதியவிண்ணவர்முனிவரர்மாலயன்முதலோர்
துதிசெய்வேளுறைதிருச்செந்தூர்மேன்மையைச்சொல்வாம். (௩௪)

சோமேசுரச்சருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம் ௩அஎக.

---

✠ குரங்கி-சந்திரன்

## திருச்செந்தூர்ச்சருக்கம்.

விரிபூஞ்சோலைபுடைசூழும்வீதிமணிமாளிகைசூழும்
வரிசூழ்கமலமலர்சூழும்வாவியுறைவண்டினஞ்சூழும்
பரிவார்முனிமந்திரஞ்சூழும்பகர்வார்முனிமந்திரஞ்சூழும்
திரைவாரிதிசூழாலயத்தார்சேர்ந்தருறையுந்திருச்செந்தூர். (௧)

மையார்பொழிலின்மகமாரும்வானோர்பொழிலினமகமாருந்
தொய்யார்முலையில்வெளுப்பாருந்தோயார்முலையில்வெளுப்பாருங்
கையார்கமலம்பலசெறியுங்கரையார்கமலம்பலசெறியுஞ்
செய்யார்சாலிபுடைசூழுந்திகழ்வேன்முருகனதிருச்செந்தூர். (௨)

சீலமறையோர்மறைமுழங்குஞ்சிறந்தபுணரித்திரைமுழங்கும்
வாலமணிச்சங்கினமுழங்கும்வண்டின்மதுரவிசைமுழங்கு
மாலையுழவர்தொனிமுழங்குமளவரமலைமிசைமுழங்குங்
கோலமயில்வாகனனிமையக்குமரிகுமரன்றிருச்செந்தூர். (௩)

கன்னல்வளருங்கழனிதொறுங்கடைசிமாதர்களைகளையச்
சென்னல்வளரும்பலவளங்கள்செறிந்துவளருந்திருவோங்கு
மன்னுபொருனைநீராடிவானோர்முனிவரரம்பையர்கண்
முன்னிவிரும்பியடிபரவுமுருகனுறையுந்திருச்செந்தூர். (௪)

தமரக்கடலினலைகொணர்ந்துதரளஞ்சிதறுமணிவீதி
நிமிர்பொன்மணிமாளிகைதோறுநிலவுவளைகணிரைதவழு
மமரர்மடவார்குழுநெருங்குமரவமடவார்குழுநெருங்குங்
கமலமலர்வாவிகள்சூழுங்கடம்பனுறையுந்திருச்செந்தூர். (௫)

குலவுபவழக்கொடிபடர்ந்தகோலக்கமுகின்மீதேறி
யிலகுபழுக்காயக்குலையினிசைந்திறும்பூதெனவேயினிதோங்கும்
பலவுநறுஞ்சந்தனச்சோலைபாங்குசூழும்பசுங்கிளிகள்
கலைகள்பயிலமயிலாடுங்கந்தனுறையுந்திருச்செந்தூர். (௬)

அன்னமுறையுமணிப்பொருனையாறுமகிழ்வாயாறுமுகன்
மன்னுதிருச்சன்னிதிமருங்குவந்துதரளந்திரைக்கரத்தாற
றன்னச்சொரிந்துசந்தவரைசூழுமுயர்கோபுரஞ்சூழுங்
கன்னிமதிள்சூழாலயஞ்சூழ்கடம்பனுறையுந்திருச்செந்தூர். (௭)

வீரப்படையான்றிறலுடையான்வெம்மையுடையான்வெகுளியினுன்
சூரனொருவன்புவியனைத்துந்துயர்செய்காலையவனுரத்திற்
கோரநெடுவைவேல்விடுத்துக்கொன்றங்கசுரர்குலந்தடிந்து
வாரமுடனமரான்முதலாய்மகிழ்ந்துகுமரனுறைபதியாம். (௮)

அசுரர்கிளையைச்சூரனொடுமறுத்தோனமரர்சிறைவிடுத்தோன்
விசையமுழவேயிந்திரனைவின்னாடரசுபுரியவைத்தோன்

றிசைகள்சூழுங்கமயிலூர்வோன்றேவர்சேனாபதிமுருக
னிசைகண்மிகுநதகுடமுனிவற்கினியகுமரன்றிருச்செந்தூர். (௯)

இன்னவளங்கண்மிகப்பொருந்தியிசைமுத்தமிழும்பொருந்துசேந்தூர்.
மன்னிவளருமறுமுகனைவள்ளிகொடிசேர்வரைப்புயனைத்
துன்னித்தினம்வந்தனைபுரிந்துசுரர்கின்னரர்சித்தர்களியக்கர்
பன்னுமறைமாமுனிவரர்கள்பணிந்துதொழுதுதிசெய்வார். (௰)

பெருகுவில்வருணனகமகிழ்ந்துயொருநைமாதைப்பொருந்தவெண்ணிக்
கருதிமுருகன்மயிலூர்திகமலச்சரணந்தனைநினைந்து
பெருகுதவங்கள்புரிந்துபின்னும்பிறங்குமலையமுனிவனையும்
பரவிநினைந்துதொழுதேத்திப்பன்னாளிந்தப்படிபுரிந்தான். (௰௧)

தவங்கள்புரியுஞ்செயலறிந்துதமிழ்மாமுனிவன்குகனருளா
லுவந்துகருதிக்குளிர்பொருநையுயர்மாதினையவ்வருணனுக்குத்
துவங்குமுழவத்தொனிமுழங்கத்தூயவதுவைசெய்வித்தே
யவங்கடொலைக்குஞ்சங்கமுசமாடித்திருச்செந்தூரணைந்தான். (௰௨)

கொன்றைமுடித்தகுழகனடிகுறிக்குங்குறியதமிழ்முனிவன்
சென்றுதமரக்கடலலைவாயத்திகழுந்திருவாலயத்தணுகிக்
குன்றுதொறுநின்றாடுமெங்கோன்குமரனிருந்ததிருக்கோயி
னின்றுவிழியாற்பருகியுளநினைந்துதொழுதுபுகலுவான். (௰௩)

என்பாலினியதிருவுள்ளமிரங்கவேண்டுமிதுநாளி
லன்பாய்ஞானநிலையுணரவடியேற்கருள்வாயெனப்பணிந்தான்
மின்போலொளிருங்கதிர்நெடுவேல்விமலனமரர்சிறைவிடுத்தோ
னென்பான்மலையமுனிகருநெறிசெப்பவேண்டுநிறைநினைந்தான். (௰௪)

செய்யதிருச்சேவடிமுனிவன்சென்னிமிசைவைத்தருள்புரிந்து
மையல்வினையைநீக்கியுள்ளமகிழ்மெய்ஞ்ஞானமுரைசெய்வான்
மெய்ம்மைமுனியேயாகமங்கள்வேதநூல்கள்புராணங்க
ளுய்யவுரைக்கும்பதிபசுபாசத்தினுள்ளவிசித்திரமே. (௰௫)

ஆதப்பொருண்மூன்றினுக்குமுனமாகவிருக்கும்பதிபரமாய்
முந்துசிவமாய்நித்தியமாய்முடிவிலாதபூரணமாய்ப்
பந்தமணுகாநின்மலமாய்ப்பரிவினுயிருக்குயிராகிச்
சிந்தைதெளியுமானந்தத்தெளிவாயொன்றாயநின்றிலகும். (௰௬)

சித்தோடசித்தைமருவியுய்த்துத்திரமாய்நடத்தும்பொருளாகிச்
சத்தியைநீன்றருள்வடிவாய்த்தனுவேமுதனால்வகைபுரிந்து
முத்தியுயிர்கள்பெறும்பொருட்டுமுதிரைந்தொழிலுமுறைநடத்துஞ்
சித்தர்க்கடையாமாயைமுதலானவிகற்பவிகாரங்கள். (௰௭)

பலவாய்ப்பசுக்கள்வியாபியாய்ப்படருஞ்சகசமலத்தினவாய்க்
குலவிநசிப்புமிலவாகிக்கூறும்வினையானரகசொர்க்க

மூலவிப்புசிக்குமலபாகமுறிற்பூரணமாய் நிறையருளா
லிலவுமசுத்தமலமதனைநீங்கியுணர்வாய்ச்சிவத்தடையும். (௧௯)

வருமாருயிரின் றிறமூன்றுமலையமுனியேயன்றோர்கள்
பெருவிஞ்ஞானகலர்பிரளையாகலர்சகலரெனவே
யரியவிவருக்கடைவாமாணவமாயைகன்மங்களிவை
விரியுமிருளாணவகன்மமிகுந்தமாயையுடன்றொடரும். (௨௰)

அரிவேதியனேமுதலமரருமாதவத்தோரமராக்கர்
நரர்கண்முதலாக்கீடாந்தநாட்டிலுறைமும்மலப்பசுக்கள்
வருமெய்ப்பிறவித்துயர்நீங்கார்வாய்க்குமிவர்கடனிற்குரவன்
திருவாரருளாற்பசுத்துவம்போய்ச்சேர்வாருணர்வாற்சிவதத்துவமே. (௨௰)

பாசவிதங்களைந்தாகும்பகரின்முதலாணவமதன்மேல்
வாசிதருத்திரோதாயியதோமாயைவினைமாமாயையெனப்
பேசுவகையிலுயிர்கள்பந்தப்பிணியாலுழலும்பிறியாதெம்
மீசன்கருணைக்கடவுளருளிதுவென்றிசையாநாளெல்லாம். (௨௧)

ஆருமறிவுமறைந்திடுமாணவந்தான்செம்பிற்களிம்பெனவே
சேரும்வகையாலுணர்போகஞ்சேரநசிப்பித்துயிரொவைக்குஞ்
சாருமலபாகங்கள்வரத்தானசெய்வதுத்திரோதாயியதாம்
வாரநிறையுமதோமாயைமலமாமென்பதுபசாரம். [௨௨]

மற்றைமாயைதனுமுதலாய்மன்னியிருங்கலாதிகளா
லுற்றவகைசிற்றறிவுமளித்துடனேமயக்குநசியாதாம்
பற்றும்வினையாலெடுக்குமுடற்பரிந்தவேதுப்பிறப்பிறப்பின்
சுற்றுவிதபோகமுமாகித்துய்ப்பதன்றிதநீராவாம். [௨௩)

அத்தனருளானரகாதியைநந்தும்விரியுமாமாயை
சித்தநினைக்குமதோமாயைதினமுங்கன்மங்களைச்செலுத்துஞ்
சுத்தமுனியேயுணர்பவர்யார்சூழுமலமாயாதுகன்மந
தத்தமுயிருக்கநாதியேசாருமவையேசடமாகும். [௨௪]

இந்தவகையாம்பாசவிருளெய்தியுயிர்கடனக்குடலாய்
வந்துநிறைதத்துவங்களையுமலங்கடனையுமதிலமூர்ந்து
முந்துதனையுமுணர்த்தியருண்முதல்வன்றனையுமுணராது
பந்தநிறங்கொள்படிகமெனப்பாசவிகாரமிகப்பெருகும். [௨௫]

என்றுமுளதாமெவ்வுயிர்க்குமிச்சாஞானக்கிரியையது
துன்றைவகையபாசத்தாற்றூய்மைவிளங்காமுத்தியினி
லொன்றியெவ்வமலமதகன்றொருவனருளான்முழுதுமுணர்
நன்றிதருஞானதிதளானலங்கள்சிறந்துபூரணமாம். [௨௬]

தோன்றுமுயிர்கேவலசகலசுத்தமெனவேசுழலவத்தை
மூன்றுவிதங்கேவலங்கருவிமுற்றுமகன்றேயிருள்வழியி

லான்றுபொருளையறியாமலப்பாற்சகலஞ்சிருட்டிதொடுத்
தேன்றமுறைசங்காரமதிற்பிறந்துமிறந்துமுழல்வதுவே. (௨௭)

தொகுத்தமலபாகம்வரவேசூழும்வினைகளிரண்டுமொப்பின்
மகத்வமுறுசத்திநிபாதம்வயங்கவரன்சற்குருவாகிச்
சகத்திலருளக்கேவலமுந்தவிராதிருக்குஞ்சகலமுந்தான்
அகத்தின்மலநீங்குவதுசுத்தமாமென்றுரைப்பாரறிந்தோரே. (௨௮)

நிறைநீயுமோதுவிருண்மலங்கணீங்கிநிலைமுத்தியினுணர்வா
யுறையுமேகமகன்றெங்குமுற்றகதிர்போல்விளங்குமுயி
ரிறைமைசேருந்துரியாதீதத்தினெல்லைவரும்பரமே
லறிவுதருதற்பரங்கடந்தவருளிற்சிவமாயினபமுறும் (௨௯)

ஐயறத்துவங்களாறுறுமலமந்தகன்றேயருள்சேரு
முயிர்கள்சிவத்தின்வேறாகாவொன்றதாகாமெய்த்தவனே
பயிலத்துவிதப்பேறனபரமானந்தப்பேறறினதா
யுயர்பேரின்பச்சேவடிக்கீழுற்றுவாழுமெனவுரைத்தான். (௩௰)

இன்னவகைதானருள்புரியுமெல்லைமுனியுமெழுந்துகுகன்
பொன்னினடித்தாமரைபபோதைப்புகழ்ந்துசிரத்தினமிசைச்சேர்த்தி
மன்னுமிதையமலர்மீதுவைத்துமகிழ்விறொடுபோற்றி
யுனனிமேனிபுளகிதமாயுயர்ந்துதுதிகளுரைசெய்வான். (௩௧)

வேறு

கந்தனேகருணையானேகடவுளேகருதுவோர்கள்
சிந்தையிலுறையுந்தேவேதேவர்கள்சிறையைத்தீர்த்தே
யிந்திரநாதன்றனையமருலகாளவைத்த
சொந்தநாயகனேபோற்றிதிருக்கைவேலிறைவாபோற்றி. (௩௨)

குரைகடற்றீரமேவுங்குமரனேகுகனேவேளே
பரைதருபரனேசெய்யபன்னிருகரத்தாய்வேத
முரைசெயும்பொருளேயீசனுதவியபாலாவேலா
வரைபகவெறிந்தோய்போற்றிவள்ளிநாயகனேபோற்றி. (௩௩)

தடம்புவியிடத்துவந்துசார்ந்திடுமுயிர்களெல்லா
முடம்பெடுத்துழலாவண்ணமுயர்ந்தமெய்ஞ்ஞானந்தன்னைக்
குடங்கையிற்கனிபோலென்பாறகூறுசற்குருவேபோற்றி
கடம்பணிபுயத்தாய்போற்றிகாங்கையாபோற்றிபோற்றி. (௩௪)

வானுதற்றெய்வயானைமருவியபுயனேமேய
வாணவமகற்றியென்னையாண்டுகொண்டருளுநாதா
காணுமெய்ப்பொருளேசூரன்கடற்படைகடிந்துநீக்கிச்
சேணில்வாழ்பவரைக்காக்குந்தெய்வநாயகனேபோற்றி. (௩௫)

புனிதவேதியனீள்சென்னிபுடைப்புறப்புடைத்தகோவே
கனிமொழிக்குறத்திபாகாகடவுளர்பணியும்பாதா
வினியமெய்யன்பர்க்கெல்லாமின்பமெய்வாழ்வுநல்குந்
தனிமுதற்பொருளேநீதிதழைத்தசெந்தூரபோற்றி. (௩௬)

பூங்கணைமதனவேளைப்பொருசிலைமதனவேளே
கோங்கரும்பனையகொங்கைக்குறமகள்வள்ளிக்காக
வேங்கைநன்மரமாய்நின்றவித்தகப்பொருளேசேவ
ரூங்குகேதனனேசெந்தூர்ச்சண்முகாபோற்றிபோற்றி. (௩௭)

வாரணமுகத்தோன்முன்னேவரவந்தசுகந்தாகந்தா
சீரணிமயிலிலேறுஞ்சேவகாதமிழ்ச்செந்தூரா
நாரணன்மருகாகுன்றினடித்திங்கமலப்பாதா
வாரணமின்னனங்காணுவறுமுகாபோற்றிபோற்றி. (௩௮)

என்றுதோத்திரங்கள்செய்தேயிணையடிபணிந்துபோற்றி
நின்றுசெங்கைகள்கூப்பிநெறிதருகுறியகும்பன்
றுன்றுமெய்ஞ்ஞானம்பெறறுத்தூயநலவிடைகொண்டேகிச்
சென்றுதன்மலையவெறபிறசிறப்புடனினிதுசேர்ந்தான். (௩௯)

முருகனேநாவலூசிமுறையினிலருளப்பெறறு
வருதமிழ்முனிவன்கீர்த்திமதியினலுணர்வார்யாரே
கருதியிப்புவியின்மாந்தர்கந்தனைச்செந்தூர்சென்றே
யுருகியகாதலோடுமபணிபவரும்பராவார். (௪௰)

மேவுவைகாசித்திங்கள்விசாகங்கார்த்திகைமாதததி
லாவதாங்காத்திகைக்குமானந்றபொருநைகூடுந
தாவுவாரிதியினமேவிச்சங்கமததுறைநீராடிச்
சேவகனடியைப்போறறிறறீநதிடும்வினைகளெல்லாம். (௪௧)

அரனருள்குமரன்செம்பொனாலயமுன்னராகப்
பரிவதனூரம்பத்திறபருவங்கடோறுமூழ்கி
விருவினைமுழுதுநீருமினிதலைவாய்த்தீர்த்தங்கண்
மருவியேமூழ்கிலினபவளமெலாம்வழங்குமாதோ. (௪௨)

கார்த்திகைமாதமேவுகார்த்திகைநாளிலங்கண்
பூத்தபூரணையின்வந்தபொருதிரைக்கடலின்மூழ்கி
வாய்த்தசெந்தூரன்பொறறருள்வணங்கியேவலஞ்செய்தன்பா
யேத்துவோர்ஞானம்பெற்றேயின்பவீடெய்துவாரால். (௪௩)

இன்னதாஞ்செந்தூர்மேன்மையென்றுதானியம்பிப்பின்னு
முன்னுநற்சுகர்க்குவேதவியாதனூர்மொழிந்தவாறு
மன்னுசங்கமத்தினமேன்மைவரத்தைமகிழ்ந்துபோற்றித்
துன்னுநன்முனிவர்கேட்பச்சூதமாமுனிவன்சொல்வான். (௪௪)

திருச்செந்தூர்ச்சருக்கமுற்றும்.

ஆக—திருவிருத்தம்—௩௬௰௪.

## சங்கமத்துறைச்சருக்கம்

சீருலாவியபொருநைமாநதிமகிழ்சிறந்தே
யேருலாவியகீழ்க்கடலிடைவாந்துகூடு
நீருலாவியதலமெலாநித்திலம்விளையுஞ்
சாருநீடலம்புனிதமாஞ்சங்கமத்துறையே. (௧)

விரியுமாழ்கடன்மேலுளதீர்த்தத்தின்மேலா
மரியதீர்த்தமிச்சங்கமத்துறையினீராடிப்
பரிவினிற்றிருச்செந்திலான்பதமலர்பணிவோர்
கருதுசெல்வங்கள்பெற்றுமெய்க்கதியினைப்பெறுவார். (௨)

கங்கைதனினுமேன்மைசேர்கதிதருபொருநை
மங்கையினபமாய்வருணனைமகிழ்வுடன்கூடுஞ்
சங்கமத்துறைமூழ்குவோர்பவவினைதணந்து
திங்கள்சூடியசிவனிருபதமலர்சேர்வார். (௩)

நீடு§மைவகைப்பருவங்கணிகரில்சங்கிரமங்
கூடிருகதிர்க்கிரணங்கள்கொண்டமாமகமும்
பீடுசேர்மற்றைத்தினங்களுஞ்சென்றுபெட்புடனே
யாடுவாரிருவினைதொலைந்தரனுலகடைவார். (௪)

தேவர்விஞ்சையர்கின்னரர்மற்றுளதிசையோர்
பூவின்மாக்களும்புண்ணியதினங்களிற்பொருநதி
யாவலோடுநீராடிச்செந்தூரறுமுகனைச்
சேவைசெய்துபேறடைந்தவர்தமையெவர்தெரிப்பார். (௫)

பொருவில்சங்கமத்துறையுயர்மேன்மையைப்புகன்றேங்
கருதுவோர்க்கருடாம்பிரபன்னிதன்கதையைத்
தருமநற்றவச்சுகனுக்குவியாதனூர்சாற்று
முறையினுற்றுரைப்பேனெனச்சூதனுமுரைப்பான், (௬)

சங்கமத்துறைச்சருக்கமுற்றும்

ஆக—திருவிருத்தம்—௩௯௱௨௧.

---

## தாம்பிரபன்னிச்சருக்கம்

மலையமால்வரையாதியாய்வாரிதிவரையுந்
தலமுந்தீர்த்தமுங்கடவுளராலயந்தானு
முலகம்யாவையும்புகழவேயறிந்தவாறுரைத்தே
யிலகுதாம்பிரபன்னிதன்மேன்மையையிசைப்பாம். (௧)

---

§ ஐவகைப்பருவம் பூசனுஞ்சேர்ந்தநாயிற்றுக்கிழமை- பிறந்தநாள்-வியதிபாதம்-வைதிருதி-அமாவாசை பூரணைகள்.

கார்நிறக்குழலுமைதிருக்கரத்திடைப்பிறந்து
சேருமாநதிப்பொருநைதென்கங்கைமான்சிறந்தே
பாரின்மிக்கதோர்பாண்டிநன்னடெலாம்பரந்து
சாருமாருயிரறங்களுந்தழைக்கவேசார்ந்தாள். (உ)

பாங்கிருகரையெங்கணும்பண்ணவர்சாலை
தேங்குகங்கைசூழ்சென்னியன்சிறந்தவாலயங்க
ளோங்குமாயனற்கணபதியுரம்பெறுவேலோன்
பூங்குழற்றுர்க்கைகோயிலும்புகழுடன்பொருந்தும். (௩)

வாய்த்தபல்லுயிர்த்தொகையெலாமகிழநீராட்டிய
பூத்தநேயத்தாரமுதமும்புனிதமாயூட்டி
நோய்த்துயரில்லாதளித்தலானுவலரும்பெருமைத்
தாய்த்தகவ்வொடுசிறந்ததுதண்புனற்பொருநை. (௪)

திருந்துதாம்பிரமலையத்திற்சிறந்தினிதெழுந்து
திரந்தருசூழ்ந்துபைங்கூழொடுநிறைபலம்பொருந்து
மரங்களுந்தழைத்திடவருகாலணைமருவிச்
சுரந்தநீர்செறிபொருநையின்பெருமையாசொல்வார். (௫)

செய்யவேள்விகளியற்றுவார்சிறந்தவேதியர்கண்
மெய்ம்மையாமனுநீதியேநடத்துவார்வேந்தர்
வையம்போற்றநல்வளங்களையுதவுவார்வணிகர்
பொய்யில்சூத்திரர்தழைத்திடும்பொருநையாதீரம். (௬)

இன்னதாம்பிரபன்னியையெத்தலத்திருந்து
முன்னுசிந்தையினினைப்பவர்வருகங்கைமுதலாய்த்
துன்னுதீர்த்தங்களாடிடினிணைதநிடுநதுயோர்
முன்னையூழ்வினைநீங்கியேமுத்தியையடைவார். (எ)

சுலவிநீரெலாமொருமுகமாய்வருந்துறைகள்
பலநதிகளுங்கூடியதலங்குணபாலோ
டிலகுதெக்கணவாகினிகங்கைசூடிறைவ
னில்வுமாலயச்சன்னிதிநேரவருதுறைகள் (அ)

கடவுளானவர்முனிவரர்கருதியதானந
திடமிதாமிநதத்தலங்கண்மாதீர்த்தமதாகு
மடைவினங்கெய்திமூழ்குவோராணவமலங்க
ளுடனகன்றிடவானந்தமுத்தியையுறுவார். (௯)

நதியிரண்டொருமூன்றுநான்கைந்தின்மிகுந்தே
யதிகமாகவும்வந்துடன்கூடுமத்துறைகண்
முதிர்பலாபலஞென்றுக்கொன்றதிகமாய்முறையி
னுதவுமத்துறையாடுவோரரனுலகுறைவார். (௰)

பொருநையுத்தரவாகினிமூழ்கிற்புண்ணியங்கண்
மருவித்தீவினைபோக்கியேமுத்தியைவழங்குந
தருமநீடியபச்சிமவாகினிதன்னை
யிருநிலத்தவர்காண்பதற்கெளியதன்றுமால். (௰௧)

வேறு.

ஆனதொருமுக்கொடியரைக்கோடிதீர்த்தத்துமதிகமாகு
ஞானநெறிதழைத்தோங்குநதெய்வநதிதண்பொருநைநதியேயாகுந்
தானமிருபுறமுமடிதொறுநதீர்த்தமுளவாகுந்தவங்கள்செய்து
மானமுறுவருணனுமிந்நதிபொருந்துசெல்வவளம்வரத்தாற்பெற்றான். (௰௨)

பரிவுறுதண்பொருநைநினைந்தெபபுனலிறபடிந்தாலும்பலன்களெய்தும்
விரியுமுலகதனின்றிற்றீர்த்தமெல்லாமிந்நதியைவிரும்பிப்போறறுங்
கருதிநினைந்திடுநதம்மைச்சுத்திசெய்யும்பொருட்டாருங்கலந்துமூழ்கும்
பெருமைநலங்கிடையாதுவினைதொலையுங்காறும்வினைபெற்றியோர்க்கே. (௰௩)

குடங்கையிலோருழுநதமிழ்நதுமத்துணையிப்பொருநையினீர்கொண்டாற்றங்க
ளிடங்குலவுவினைசெநதீயிருங்கானநதெறுவதெனவிரிநதுநீங்குந்
தடங்குலவுமந்நீரால்விளையுணவாநெல்லாதிதானுண்போரு
மூடன்கலநதவினைநீங்கியுண்மையாய்ச்சிவனுலகமுற்றுவாழ்வார். (௰௪)

வருகோதாவிரிதோற்றமாயையின்பாற்கோதமைநீர்மாதுதுற்கை
தருகலையாம்வடகங்கைதான்கலைமான்கலையாகுஞ்சார்காவேரி
திருமகளிறறோறறமாநதிகழ்தருதென்மலையிடத்திறசிறந்தேதோன்றும்
பொருநைநதியுலமகரத்திறபிறந்தனளேலிவள்புதுமைபுகல்வதாரோ. (௰௫)

நன்னதியாநதமிழ்ப்பொருநைநதியுடனேகாவேரிநதியுஞானந்
தன்னையருடென்கங்கைதானுகுநடுநிலையதானகங்கை
மின்னுதுங்கபத்திரையுங்கிருட்டிணவேணியுங்கோதாவிரியுமாகு
முன்னுபகீரதியமுனையுத்தரகங்காநதியென்றுரைப்பர்மேலோர். (௰௬)

திவ்வியபொன்னித்திலமூர்திகழ்மணியுமீன்றதிருப்பொருநைநல்லா
ளெவ்வளமூநதருஞ்சகலதீர்த்தமயிலென்னவும்பேரிசைப்பர்மேலோர்
பவ்வநெடும்பிறவிகடந்தேறுதற்குப்படியுறுசோபானமாகு
மவ்வியமதகற்றிநீராடுவோர்க்கிகபரமுமளிக்குமாதோ. (௰௭)

பூதலத்திற்பிறந்துமுன்செய்புண்ணியங்களுளதாகிற்பொருநைத்தீரத்
தேதமிலாதிப்போதுஞ்சராசரங்களாய்ப்பிறக்கவெய்துமென்று
நீதிதருமநதியிற்றானபானங்களுநன்னெறியோர்க்கெய்து
மாதரவாய்க்காண்போருமெளிதாகப்பெறுவரரனுலகந்தானே. (௰௮)

### வேறு

உற்றநதிப்பொருநையிருபாலுமேவியுயிரிறந்தோரங்கமதினூடேபோடப் [ரம்]
பெற்றவர்களவினைநீங்கிக்கயிலைசேர்வார் பிறவியிலையிநதியிற்படிந்தோர்க்கெலை
நற்றவங்கடெரிசிப்போர்க்கெய்துமிக்கலனுண்டாம்பரிசிப்போர்தமக்குஞானம்
பற்றுமொருதினமூழ்கினித்தமாடிப்பரகதியைப்பெறுவரொன்றேபகரும்வேதம்- (

திரையெறியும்பொருநைநதிதனிலாடாமற்செயதவங்கள்செய்தாலுமாவதில்லை
யாலுதவுமிநதியைநேராய்ப்பெற்றுமயலிலொருதீர்த்தமதிலாடபபோவோர்
கரியதொருகாகநிகராவரொன்றுகற்றவர்களுரைசெய்தார்கருதுநித்தம் [ல்]
பெருகுபுனறபொருநைதனின்மூழ்குவோர்கள் பிறவாதமுத்தியினைப்பெறுவராமா

விரும்பியிருகரையிடத்தும்விண்ணோர்சித்தர்வித்தகமாதவர்யோகர்மேவிச்சூழ்ந்து
திருந்தவெங்குநதாபித்ததீர்த்தநீதிச்சிவலிங்கமாலயங்கள்சிறப்பாய்ச்செய்தே
பொருந்தியதாம்பிரபன்னித்தாயைப்போற்றிப்புகழ்பரிபாலனஞ்செயயும்பொருவி
ல்வேந்தர், பெருந்துயரவினைநீங்கியின்பமெய்திப்பிஞ்ஞகன்றனடிக்கமலம்பெறு
வர்தாமே. (உக)

திங்களொடுவாளிரவிசேருநாளிற்சிறந்தவிவர்பெயர்நாளிற்சங்கிராந்தி
பொங்குமயனத்தில்விதிபாதநாளிறபுகல்கிரகவக்கிரநாட்பிறந்தநாளிற
றங்குகொடுங்கனவுறுநாட்பயர்ந்நாளிறறண்பொருநைநதியாடித்தானஞ்செய்யிற்
றுங்கவினையதுநீங்கும்பெருவாழ்வெய்துஞ் சுகானந்தவீட்டிலின்பந் துலங்கவாழ்
வார். (உஉ)

தீயகொடுங்கலிவலிதானணுகுறாதசிறந்ததிருப்பொருநைநதித்தீரந்தன்னி
னெயமுடனொருபசுத்தான்கிடக்குமந்தநிலத்தளவுதிருந்தியநன்னிலமும்பொன்னு
மேயுமெள்ளோடறுகுமறையோருக்கீந்தாலென்றுமிடர்செய்பிராரத்வமான
மாலையவினையதுநீங்கியின்பமெய்திவரதனுயர்திருக்கயிலைமருவிவாழ்வார். (உங)

உறுதிதருங்கதிவிரும்பிக்காணிலேகியுற்றசெந்தீநடுநிலைநின்றுழலுவீர்காண் [க்]
மறுவின்மதிவதனவடிவுடையமாதுமலைமகளபொன்மணிக்கரததில்வந்துதோன்றி
குறியமுனிகுண்டிகையிலிருந்துவந்த குளிர்பொருநைதனிலொருநாட்சென்றுமூழ்
கி, லறுபதினாயிரவருடங்கங்கையாற்றிலாடுவோர்பெறுபலத்தையடையலாமால்.

செய்யசெபதவமோமஞ்சிறந்தயோகஞ்சிவார்ச்சனைசெய்பிதிர்கன்மந்தானம்வேள்
வி, மெய்யுதவுபொருநைநதித்தீரந்தன்னின் மேன்மைபெறச்செயயிலொன்றுகோ
டியாகும், வையமிசையரனருளான்மகிழ்ச்சிகூர்ந்துமலையபருப்பதத்திடையுற்பத்
தியான, தையலிவள்பெருமையெவருரைக்கவல்லார்ரமசரமெவைக்குமொருதா
யாதாமால். (உரு)

### வேறு

கலர்ந்துறுமுயிர்கட்கெல்லாங்கன்மமாம்வினைகடீர்த்துப்
பலர்தருமுத்திசேரும்படிசெயும்பண்பினாலே

பொலந்தருகமலச்செல்விபொருநைமான்புனிதமிக்கா
னலந்தருமவட்குப்பாவநாசனியென்றும்பேராம். (உ௬)

சிறந்திடுமாகத்தானஞ்செய்யநற்கிரணநாளி
லறந்தருதனுமாதத்திலாதிரைமற்றைநாளிற்
றிறந்தருபொருநைதன்னிற்றீர்த்தம்வந்தாடினோர்கள்
பிறந்துழல்செனனநீங்கிப்பிறவாதமுத்திசேர்வார். (உ௭)

மேோதவெண்டிரைக்கைராசன்முன்னொருகாலமிந்த
மேதினியதனிலுள்ளநதிகளின்மிக்கதீர்த்த
மேதெனவினவியோர்நதுபொருநையினிடத்தினெய்தித்
தீதறவேள்விசெய்துசிவனருளபெற்றுவாழ்ந்தான். (உ௮)

உளம்பெறுவிருப்பினோர்ந்தவுணர்வினுலினிதுபோநது
கிளர்நதவித்தீர்த்தமாடக்கிடையாததேயததோரும்
வளநதருதிருநெல்வேலிவருதமிழ்ப்பொருநைநீரால
விளைந்தநெல்லுண்ணப்பெற்றோர்வெள்ளிவெற்பிடத்தில்வாழ்வார். (உ௯)

துலங்கியநதிகளொவ்வோருகநதொறுந்தூயதாகிப்
பலங்களையுதவுமிந்தத்தாம்பிரபன்னியாரி
னலங்கிளருகங்கண்மூன்றுநல்லவிக்கலியுகத்து
மிலங்குநீராடினோருக்கின்பவீடினிதுநலகும். (௩௰)

இநதமெய்ப்பொருநைத்தீரத்திருக்குநன்னெறியோர்தாமே
முநதியசென்மந்தன்னிற்றேவராமோட்சம்வேண்டி
வநதுமேதினியினல்லமானிடர்வடிவுகொண்டா
ரந்தியகாலந்தன்னின்முத்தியையடைகுவாரால். [௩௧]

ஆதியிலவிளையும்ரத்நமானதோர்பொருநைநாப்பண்
மேதகுதிவ்யமானதாம்பிரம்விளைவதாகுஞ்
சோதிவெண்டரளமநதந்துலங்குறவிளையுநாளு
நீதிசேரினியநீரானிறைசெல்வமெவர்க்குமுண்டாம். [௩௨]

சறுவவேதங்களாலுஞ்சறுவசாத்திரங்களாலு
மறுவிலெப்புராணத்தாலும்வழங்குமாகமங்களாலு
முறுதிசேர்பொருநைமேன்மையுரைப்பதற்கரிதாமென்னிற
குறுமுனிகொணருமிந்நதிக்கிணைகூறலாமோ [௩௩]

இத்தகைப்பொருநைமேன்மைகேட்டவர்புகழ்ந்தோர்கண்டோர்
பத்தியாற்பானஞ்செய்தோர்பரிவொடுதானஞ்செய்தோர்
நித்தராகுவரின்னோரைநீதியாற்போற்றுவோர்க
ளத்தன்வாழ்கயிலைவெற்பில்லடைந்தினிதுகந்துவாழ்வார் [௩௪]

பொங்குவெண்டிரைக்கைத்தாம்ரபன்னியைப்புகழ்ந்தபேர்க்குப்
பங்கமுமில்லைநோய்கள்பகரவமிருத்துமில்லைத்

தங்குவெங்கலியுமில்லைச்சத்துருப்பயமுமில்லை
யெங்குளபொருளுமெய்துமெவருநதன்வசத்தராவார் (௩௫)

நலந்தருபொருநைமேன்மைநவிலுமிக்காதைதன்னைப்
பலம்பெறவிருப்பினேடும்படிப்பவர்கேட்போர்தாமுன்
குலந்தருமரபின்வந்தகோத்திரத்தோடுமுத்தித்
தலம்பெருகுறவேயின்பந்தழைத்துவந்தினிதுவாழ்வார் (௩௬)

மலடிகள்கேட்கிலின்பமைநதைப்பெறுவார்கன்னி
நலமுறுமடவார்கேட்கினல்லநாயகனைச்சேர்வார்
சலமிகுநோயார்கேட்கிற்சார்ந்திடுநோய்கடீர்வா
ரலகில்பாதகர்கள்கேட்கிலரும்பவமனைத்துநீவார் (௩௭)

இன்னதோர்மேன்மையாகும்பொருநையினினியகாதை
தன்னைநன்முனிவர்கேட்பச்சாற்றியசூதன்சொல்வா
னன்னதிப்புராணஞ்சொல்லினாலுமெய்ஞ்ஞானம்பெற்றே
னன்னதாலென்னைப்போலும்பாக்கியமாரபெறுவரால் (௩அ)

என்றிவைசொல்லிப்பின்னுமியம்புவானுயர்வியாதன்
றன்றுமெய்ஞ்ஞானம்பெறறசுகமுனிவதனைநோக்கி
னன்றுசேர்புதல்வனீயானலாதருபொருநைமேன்மை
யொன்றியகாதைதன்னையறிந்தவாறுரைத்தேனென்றான். (௩௯)

தாதைதான்புகன்றகாதைதனைமுழுதுணர்ந்தஞானக்
காதலனெழுந்துதாழ்ந்துகருதியேதொழுதுபோற்றித
திகிலாப்பொருநைதீரத்தீர்த்தநீள்சிவாலயங்க
ணீதியாற்சேவைசெய்யநினைந்தனனவிடைகொண்டானால். (௪0)

பொருநைமாநதியின்பாங்குபொருந்தியதீர்த்தமெல்லா
மருவிநீராடிச்செய்யமலையமதாதியாகத்
தருகதிச்சங்கமத்தின்வரையுளதடங்கடன்னை
யுருகியகாதலோடுமுவந்துடன்சேவைசெய்தான். (௪௧)

செய்யநல்வியாதனுருஞ்சிறந்ததன்புதல்வனோடு
மெய்தியத்தலங்களெல்லாமின்பமாய்ச்சேவைசெய்தே
கைம்மழுமானையேந்துங்கருணைநாயகனைப்போற்றித்
துய்யநல்லறிவுபெற்றுத்துாயதஞ்சூழல்சேர்ந்தார். (௪௨)

அன்னவனெனக்குக்கூறுங்கதையினையறிந்தவாறு
பன்மறைமுனிவரோடும்யானிதுபகர்ந்ததாகு
மின்னநற்கதையைக்கேட்போரெழுதுவோர்படிப்போரீசன்
பொன்னடிநிழற்கீழின்பம்பொருந்திவீற்றிருப்பர்மாதோ. (௪௩)

பரகதியுதவுந்தாம்ரபன்னியினினிதுமூழ்கித்
திரமுறுகதையைக்கேட்டுத்திருநெல்வேலியினில்வந்தே

வரைவனநாதன்செய்யமலரடிவணங்குவோர்க
ளிருவினைதொலைந்துமுத்தியெய்துவருண்மையாமால். (௬௪)

அன்புறுசிராத்தநாளிலரனடியகத்துள்வைத்துப்
பொன்புரைகளினமோங்கும்பொருநைநன்னதிநீராடி
யின்பமெய்க்கதையைக்கேட்போரபடிப்பவரிவாகடங்க
டென்புலத்தவாகளெல்லாஞ்சிவனடிக்கமலஞ்சேர்வார். (௬௫),

இந்தவாறுரைப்பக்கேட்டங்கின்பமாயெழுந்துபோற்றி
நந்தலில்கருணையுளளநயிமிசாரணியதநுள்ளோர்
வந்துதண்பொருநைமேவிமலைமுதறகடல்சேர்காறுஞ்
சந்ததநதீர்த்தமாடித்தலங்களுந்தொழுதுபோநதார். (௬௬)

மாதவரொடும்போய்ச்சூதன்மலையவெறபிடத்தில்வைகுஞ்
சீதரதீர்த்தமாதிதிகழசங்கமமதீறாய
மீதுயர்தீர்த்தமாடிச்சிவாலயம்விரும்பிப்போற்றிச்
சோதியனமலன்செய்யதுணையடிநினைந்துபோநதான். [௬௭]

யாவர்களேனுமிந்தவாறுசென்றின்பமாக
மேவுதண்பொருநையாடிவிமலன்வாழ்தலங்கடோறு
மாவலாலெய்திச்சேவையன்பினிற்செய்துபோற்றிற
பாவமதகன்றுமிக்கபரகதிநண்ணுவாரே. [௬௮]

மகத்துவஞ்சிறந்தமேன்மைமாநதிபொருநைதன்னைச்
செகத்தினுக்கமுதவாறுய்ச்செய்துதென்மலையமேவி
யிகததினிலின்பமாகுமணக்கோலமினிதுகாண
வகத்தியர்திருநெல்வேலியணிநகரதனில்வநதார். [௬௯]

புண்ணியம்பொருந்துதீரப்பொருநைநற்காதைதன்னை
யுண்ணிறைவிருப்பினஞானமுணர்சுகமுனிவன்கேட்பப்
பண்ணிறைதருநல்வேதவியாதனூர்பகருமாறு
நண்ணியிங்குரைத்தேனென்றுநலம்பெறுசூதன்சொன்னான். [௭௦]

தாம்பிரபன்னிமகிமைச்சருக்கமுற்றும்.
ஆகத்திருவிருத்தம்—௲௩௱எ௰க

## அகத்தியர்லோபாமுத்திரைக்குத்தலமகிமையுரைத்த சருக்கம்

சுருதிமறைமுனிவோர்கள்சூதமுனிமுகநோக்கி
மருவுதமிழ்முனிவேணுவனத்தினிதுவந்திருநதே
முருகலர்பூங்குழலோபாமுத்திரைக்குமொழிந்தகதை
கருதியெமக்குரைசெயெனக்கழறமுனிகழறுவான். (௧)

நீதிமறைமொழிமுனிவீர்நிகரிலருந்தமிழ்முனிவன்
கோதைநனகுரைத்தகதைகூறுவதற்கெளிதன்று
னாதிதிருநெல்வேலியமலர்தலமகிமையினை
யோதுவலுனறிந்தவகையெனச்சூதனுரைசெய்வான். (௨)

நித்தமுமாதவர்முனிவர்நிதிநிறைசிவயோகர்
சித்தவித்தியாதரர்கடேவரிசைவிஞ்சையர்க
ளத்தலத்திலவிரும்பிவந்தங்கமலனடித்துணைபோற்றி
வித்தகான்னெறிபெறவேவிரவியெங்கும்வீற்றிருப்பார் (௩)

சகலதீர்த்தங்களுநற்றருமமுமங்கிருப்பதுவா
நிகரிலருமறைமூங்கில்வனமாகநிறைந்தோங்கும்
புகலரியபெருவளங்களபொருந்துமிகுதவமோங்கும்
பகர்கருணைநிறைசிவமும்பனையினொடுபரிந்தோங்கும். (௪)

வளமுலவுபொதியவரைவந்துலவும்வீதிதொறு
மளவின்மறையோர்சாலையடியவர்களுறைசாலை
கிளருமணிநிறைமேடைகேடினமணிமாடங்க
ளுளதுநெடுங்கோபுரங்களுயர்சோலைபலவோங்கும். (௫)

புத்தமுதம்பொருந்துசிந்துபூந்துறையினீராடி
யத்தனையன்பினிற்பணியுமறிவுடையோர்க்கானதல
முத்திதருசிவதலங்களெதுதலத்துமுன்புளதாய்
நித்தியமாய்ப்பரப்பிரமநிறைந்ததிருநெல்வேலி- (௬)

இந்தநிறைவளம்பொருந்துமிப்பதியிலெந்நாளுஞ்
சிந்தைமகிழ்சிறந்திருப்போமென்றுசெழுந்தமிழ்முனிவ
னந்தரத்திலுறும்விசுவகன்மாவையழைத்தருளிச்
சுந்தரஞ்சேராச்சிரமநிருமியெனச்சொல்லினான்- (௭)

நன்றெனவேகம்மியனுநலஞ்சிறந்தபொருநைநதி
சென்றுசிந்துபூந்துறையிற்செம்மைபெறுமாச்சிரமந்
துன்றுமகமேருவெனத்தூயமுனிமனமகிழ்ந்தே
யென்றுமினிதுடனிருப்பவின்பமுறவியற்றினான்- (௮)

வந்துகுறுமுனிவனந்தமணிச்சாலைவளம்பார்த்துச்
சிந்தைமகிழ்வுறுலோபாமுத்திரைக்குச்செப்புவா
னெந்தநாளினுமெமக்கிங்கிருப்பதற்கியோக்கியமாம்
புந்திநிறையாரமுதேயென்றுநிறைபூசைசெய்தான்- (௯)

வேறு

தூயபூசைசெய்தருந்தவமுனிவனங்கிருப்பத்
தாயகற்புடைத்தேவியுமிவ்வகைசொல்வாள்

மேயதென்பொதியாசலத்திருப்பதைவிட்டு
நேயமாயிவணிருந்திடநினைந்துமோறும்- (௰)

தேவர்விஞ்சையர்முனிவரர்சிறந்திருப்பதுவு
மேவுதீர்த்தங்கள்விருப்புடனிறைந்தமேன்மைகளும்
பூவிடத்தரணித்தலம்பொருந்தியவாறு
மாவதாகியவுயிரனைத்தையும்பரிப்பதுவும்- (௰௧)

இன்னதாகியமேன்மைசேரித்தலவிசேடந்
தன்னையேயெனக்குரைத்திடத்தானினிவேண்டு -
மென்னக்கேட்டலுமின்பமாய்மகிழ்சிறந்திதனை
முன்னித்தென்மலைவாழ்குறுமுனிவனுமொழிவான- (௰௨)

செய்யதாமரைமேலுறைதிருவுக்குந்திருவே
மெய்யதாகியவேய்வனமகத்துவமெல்லாம்
பொய்யில்வேதங்கள்புகலுதற்கரியதாய்விளங்கு
மையமில்கதையன்பினிற்கேளெனவுரைவான- (௰௩)

வேறு-

ஆதியாம்பிரமந்தானேயகமகிழ்ந்திருக்கையாலுஞ்
சோதியாமிரண்டிலிங்கந்தோன்றியேயிருப்பதாலும்
வேதங்கடாமேசூழ்ந்துவேணுவாய்விளங்கலாலும்
போதனுமெனறுமனபாய்ப்போற்றியேயிருப்பதாலும்- (௰௪)

சேவுடையமலரானதிருமூலத்தானநாதர்க்
காவுடையாளுங்கூடவாதியிற்றோன்றலாலு
மூவருமின்பமாகமுறைபுரிந்திருக்கையாலு
மேவுமந்தணர்களசெய்யும்வேள்வியும்விளங்கலாலுஞ்- [௰௫]

அறஞ்செய்துவடிவாளென்றுமன்னமேகொடுப்பதாலுஞ்
சிறந்தவிப்பதிதானித்யமாய்த்தினம்விளங்கலாலும்
புறந்தருபதிகட்கெல்லாமுந்துறப்பொருந்தலாலு
மிறந்தபேரூழிதோறுமிறைவனிங்கிருப்பதாலும்- (௰௬)

வேறு-

அணிசேர்பிரமவிருத்தபுரமாகுங்கமலத்தயன்முதலோர்
பணியும்பெருமைதென்காஞ்சிப்பதியதாகும்பண்ணவர்க
ளுணருமகிமைத்தாருகாவனமதாகுமுற்றுமறை
யிணையிறவங்கள்புரிவேணுவனமாமினியநெல்வேலி. (௰௭)

இன்னபெருமைத்தலமகிமையிதனையிலகுமலர்வேதன்
முன்னஞ்சனகாதியர்தமக்குமொழிந்தானுலோபாமுத்திரையே
யன்னகதையான்கேட்டபடியறியவுனக்குச்சொல்வனென
மன்னுகருணைக்குறுமுனிவன்மகிழ்வாயினிதுபுகலுவான்- (௰௮)

வேறு.

அங்கணுய்த்தமாலிகையினைவாங்கியப்பகடு
பங்கமுற்றிடக்கால்கொடுதுகைப்பதுபாரதே
பொங்குவெஞ்சினமுனிபுரந்தரனறிருவெல்லாந
தங்குவெண்டிரைவேலையில்வீழகெனச்சபிததான். (௬)

அந்தவாறுதானிந்திரதிருவெலாமகன்றே
யுந்துநீர்க்கடல்வீழதலுமும்பர்களெல்லாம்
வந்துபாறகடல்கடைநதெடுப்போமெனமதிதது
முந்தமாநிரம்பிடுங்கினாகடனமுகட்டியத்தார். (எ)

பொருவில்வாசுகியைக்கயிறுகவேபூட்டி
யிருபுறத்தினுமமராருமவுணருமீண்டி
மருவுபாற்கடலொலியொடுமறுகிடவலியாற்
றிரியவாங்கலிற்சாய்நதறுநெடுமுடிச்சிகரம். (அ)

பாதலத்திடைவீழ்நதமநதரபபருப்பததைத
மீதெடுபபதெம்மானமுடியாதெனவிளம்பி
மாதவத்தினர்தானவர்வானவரொவருஞ்
சீதரற்கிவைசெப்பிடுவோமெனச்சென்றார். (௯)

வநதுபொன்னடிபணிநதனாமலாகசரங்கூபபி
யெநதையேயெனததொழுதனரோததினாதுதிப்பார்
நநதணிநதசெங்கரத்தனேநளினமாதுறையுஞ
சுநதரநதிகழ்மார்பனேசுருதிநாயகனே. (௰)

நெடுநிலத்தையோர்பததநிலளநதனேநீண்ட
வடிவெடுத்தனையுலகெலாம்புரநதனைவணங்கு
மடியருக்கினபவாழ்வுதானளிததனையயா
விடரினெய்திறேமெங்களுக்கருளசெய்வாயென்றார். (௰௧)

வநதகாரியமேதெனமாயவன்கேட்ப
விநதிராதிபாநடநதிடுசெயதியதெலலா
நநதிடாதுரைசெய்தலுநாகநாட்டவரோ
சிந்தையஞ்சலீரித்துயாதீாக்குவமென்றே. (௰௨)

அருள்சுரநதுமாயவனெழுநதமராகள்சூழக்
கருடன்மீதினிலேறியேசென்றுபாறகடலின
மருவியாங்கதுகண்டுபுளுவாகனநீங்கி
யிருநிலம்புகழ்கமடமதாமுருவெடுத்தான. (௰௩)

கொண்டகூர்மமெய்யிலக்கம்யோசனையிடங்கொண்டு
வெண்டிரைக்கடற்படிந்துவீழ்மந்திரமெழுப்பித்
திண்டிறற்பெருமுதுகின்மேற்றிகழுறநிறுத்தக்
கண்டுதேவருமசுரருமுன்புபோற்கடைநதார். (௰௪)

வேறு.

இன்னணங்கடைந்தகாலையெறிதிரைத்திவலைவானத்
துன்னிமீதெறிப்பப்பொங்கியுடைந்துபாற்கடல்சுழன்று
தொன்னலார்புரங்கள்காய்ந்தோர்க்குரைத்திதுபுரிந்தாரில்லை
யன்னதாலாலகாலவிடமதங்கெழுந்ததன்றே. (௰௫)

நஞ்சுதானெழுந்துசீறிநாடிமுன்வருதலோடுங்
கஞ்சனமானமுதலாயுள்ளகடவுளரதனைக்கண்டே
யஞ்சியீசெமம்மையெல்லாமடுமெனவெருவியோடிச்
செஞ்சடைக்கடவுள்வாழுங்கயிலைமால்வரையைச்சேர்ந்தார். (௰௬)

வந்துதானென்னையாளுமவரதனைவணங்கிவாழ்த்தி
யெந்தையேகயிலைவாழுமிறைவனேமழுமானேந்துஞ்
சுந்தரக்கரத்திறைவனேதூயனேபரனேயெங்கள்
சிந்தையாலுற்றவித்தேவருத்தந்தீர்ப்பாயென்றார். (௰௭)

என்னலுமிறைவனுங்கட்கெய்திய இடரேதென்னப்
பொன்னடிதொழுதுநின்றுபுகலுவாரமுதம்வேண்டி
மன்னுபாற்கடலையாங்கள்கடைந்தனமருவியாங்கத்
துன்னிவெவ்விடந்தான்முன்புதோன்றியெழுந்ததாமால். (௰௮)

அப்பவெவ்விடத்துக்கஞ்சியப்பையமென்றடைந்தோமென்னத்
தூயவன்பாங்குநின்றசுந்தரன்றனைநோக்கி
யேயநஞ்சதனையிங்கேகொணருதியென்னலோடும்
போயதுகொணர்ந்துவாங்கிப்புனிதனுட்கொண்டபோதில். (௰௯)

களத்திடைநிற்பக்காளகண்டப்பேரமைந்தானையன்
வளைக்கைமானமறந்தோர்தம்மைமகிழ்வொடுநோக்கியீங்க
ளுளத்தயவொடுமுன்போற்பாற்கடல்கடைந்திடுமென்றேத்தக்
குளத்தழல்விழியிறைவிடைகொண்டுபோயினாரால். (௨௰)

வந்துபாற்கடலின்முன்போன்மாயவன்கமடமாகி
முந்துறக்கிடப்பவாமைமுதுகின்மந்தரத்தைநாட்டிச்
சுந்தரக்கயிற்றாகவாசுகிவசித்துவீக்கி
யந்தரத்தவருமற்றவவுணருங்கடைந்தகாலை. (௨௧)

முகடிமுன்னெழுந்தாளந்தமுகடியைவருணற்கீந்தா
பகாமருத்துவரைத்தேவாபண்டிதராக்கவைத்தா
ரகமகிழரம்பைமாதராறுபத்தாறுகோடி
திகழுமங்கவரைவானச்சிலதியராகச்செய்தார். (௨௨)

சுரையெழுந்திடலும்வானோர்கைக்கொண்டுசுரரோயானு
ரருவருப்புற்றுநீத்தவவுணருமசுரரானார்
வருமுச்சைச்சிரவமாவைமகபதிக்களித்திட்டார்கள்
திருவொடுகவுத்துவத்தைத்திருமாறனமாபில்லைத்தார். (உ௩)

ஐந்தருத்தேனுச்சிந்தாமணியிருநிதிகள்பாவும்
வந்தெழுந்திடவேயந்தவகையெல்லாமாயனோக்கி
யிந்திரனறனக்கெனநீந்தானிமையவரெவரும்போற்றச்
சந்திரனெழுந்துவானிற்றணதிாபரபினூல். (உ௪)

இதுவெலாமபிறந்தபின்னரினிப்பவையெவையுமொன்று
மதிரசமதுரமிக்கவாரமுதெழுந்தகாலத்
திதிதருமவுணர்தாமுந்தேவருமெமக்குமகெனன்
றதிரவாரிதிகள்பொங்கவுடனறுபோரபுரியலுற்றார். (உ௫)

இவ்வகையிவர்கள்வெம்போரியற்றலுநாபபணெய்திச்
திவ்வியவமுதகுமபகுசெங்கணமாலெடுத்துக்கொணடே
வெவ்வியதிறத்தாலினனோரெலிருந்திடாவணணமாங்கு
மௌவலவெண்ணகைவாளவேற்கண்மோகினிவடிவுகொண்டான். (உ௬)

முருகலரறன்மௌகூந்தன்மோகினிவனப்புவாய்ந்த
வுருவொடுமாயவன்கையிலுற்றவாரமுதங்கொணடு
பரிவுறுமனனம்போலபபையவேநடந்தாளமேய
செருவிடத்தவுணர்தேவர்பினறுறசசெலவதாறரா. (உ௭)

ஆங்கதுகண்டுமாயனரும்புபொன்மூரல்காட்டத்
தாங்கியவேட்கையோடுதானவாமரராவி
நீங்கினர்போலநின்றாரொடியவனவனைநோக்கிப
பாங்கினேரிடினியவார்த்தைபவளவாயதிறந்துசொல்வான். (உ௮)

நீவிரின்னமுதத்தாலேநெடுங்களத்தெதிர்ந்துபோர்செய்
தாவிதானிறந்திடாமலொழிதிரோலமுதமுங்க
ளாவினிப்புறவேநாமூரல்குவோமெனறேநாக
மேவணைத்துயிலுமாயமோகினிவிளம்பிச்சென்றாள். (உ௯)

மதுரமென்மொழியைக்கேட்டவானவாமயங்காநின்று
ரதிர்கழலவுணரெல்லாமாசைமிக்குடையராகிக்
கதிரிளமுறுவலாலுங்கலகவேல்விழியினாலு
முதிர்கனிமொழியினாலுமோகவாரிதியினாழ்ந்தார். (௩௰)

மைக்கருங்குழலைநோக்கிமனம்புண்ணாய்மயங்குவாருந
தக்கபொன்னுதலைப்பார்த்துத்தளர்வொடுதியங்குவாரு
மிக்கபொற்றனத்தைக்கண்டுவெதும்பிநொந்துருகுவாருந்
தொக்கதானவரிவ்வாறுசோர்ந்துணாவழிந்துவீழ்ந்தார். (௩௧)

ஆயதோர்காலைவானத்தமரராயணியாயவைத்து
மாயவனமுதந்தன்னைமகிழ்வொடும்பகுந்தானன்னோர்
நேயமாயருந்துபோதனிலவொட்டாதவற்குநாப்ப
ணேயவாங்கிராகுவெனபோனிருப்பதோர்கூறிப்பாறுகண்டான். [௧௨]

கண்டுடன்சினமீக்கொண்டுகையுறுதெறுவியாலே
தண்டுழாயமாயனன்னோனறலையினைத்துணித்துவீழ்த்தா
னண்டாதமமோடுமுன்னமலைகடலமுதந்தன்னை
யுண்டவிற்றுணைடிரண்டுமுயிரினைப்பெற்றவாமால. [௧௩]

ஆனதோர்காலைமாயனருக்கனைவிதுவைநோக்கித
தானுளம்வெகுண்டுசொலவானசாரதவிகட்கதிராகு
வேனைமற்றுங்கடம்மையெதிருற்பயாயகீவிர
மேனமையடைந்துகழ்ந்தபபோதனமிகப்பரிவுழப்பீரொனருன. [௧௪]

அமுதமுண்டமரரெல்லாமாருயிரதனையோம்பிக
கணமயிலவெஞ்சினத்துப்பொலலாசகாரிற்றாசயுணாதம்மைச்
சமாசெய்துசெருத்துவேலைதாழ்ந்தநாதிருவுமபெற்று
விமலமாரசெமபொற்கூடிறபணடுபோனமேவினாரால. [௧௫]

வேறு.

ஏத்துதானிவணிகழ்ந்தனவெறிதிரைப்பரவை
மீதூதங்கியவாமைவெண்பாற்கடனமுதலா
யோதுமேழ்கடலொனறுபட்டோங்குநீரொழுந்தே
பூதலப்பரப்பெங்கணும்பொருந்தினறதுவால. [௧௬]

இலக்குமீமன்முதகிலககம்யோசனையெழிறகரங்க
குலவுமத்தொகையளவையாகுணித்திடவலலா
ருலகிலுள்ளவாருயிரொலாநடுங்கிடவோங்கிச
சலதியேழையுஞ்சேறெழுந்தருககொம்கலக்கும. [௧௭]

இருந்தவேலையிற்றிமிங்கலமேமுதலாகப
பொருந்துமீனகுலமனைததையுமபுழையகலவாயா
லருந்தியும்பசிதீர்ந்திலவாதலினுமை
விரிந்தபாரறச்சேறெலாநுகர்ந்துமீதலவும். [௧௮]

ஓதவார்கடலேழுமொனறாகவேயுடைத்துப
போதுநீரபெரும்பெருக்கெலாம்பொருந்துசேருக்கி
மீதியங்குவதன்றியூடுலாய்மிதந்தெழும்ப
வேதமிலபுனலிலலையவ்வெலலைநீரொவையும். [௧௯]

தேங்குவெண்டிரைதிரைத்தெழுவேலையோரேழு
மோங்குகாநதத்திலுறம்பெருவெள்ளநீரோதத

தாங்குநீந்திடுந்தொறுங்கிழிந்தாழிநீர்போநதே
பாங்குமேருவைச்சூழ்ந்துமேதினியெலாம்பரக்கும். [சுய]

இநதவாறுணாந்தெரிகதிர்பரப்புவெய்யவனுஞ்
சுநதரநதிகழபசுஙகதிாததூயசநதிரனு
முநறுநீர்ககடலுதிததெழுவஞ்சிஞரோங்கி
வநதிருட்பிழம்பணுடும்வானமுமறைதத. [சுக]

அண்டரிவவைகயறிந்தனாமலரயனோடு
மெண்டிசைப்பெருநதவாதொழுகயிலையினெய்தி
வெண்டிரைக்கடலெழுநதநஞ்சுணடவிண்ணவனைத்
துண்டவெண்பிறைசூடியதூயனைகதொழுதார. (சுஉ)

முகுந்தனுமையின்வடிவதுகொணடுமுநநீருட்
புகுநதுமநதரமெழுபபினனறிரும்பியபபொழுதிற்
செகநதனைய்ழிததாருயிாககிடர்செயதானவன்ற
னகர்ததிாததெமைககாத்தருளபையமெனறடைநதேம். [சுங]

எங்களுக்கொருதுன்பம்வநதெய்திஞலதனை
மங்கைபாகனீயனறியாதிாததிடவலலாா
கங்கைசூடிமுன்காததுபோலின்றுங்காப்பா
யங்கைமானமழுவேநதிநேயபையமெனறடைநதேம். சுச]

மச்சருபமாய்மாயன்முன்வாதைசெய்காலைப்
பிச்சனேயவைதீர்த்துயிாகாததபெறறியைபபோற
கச்சமாகிவெநதுயாசெயககவலுறுமெங்க
ளச்சநதிாததெமைக்காததருளபையமெனறடைநதெம். [சுரு)

இந்தவாறுநின்றிரநதிடுமிமையவர்ககிரங்கிக
கநதரக்கறையெம்பிரான்கடகரிவதனக
நைதநதுசைபபிளளைதனையங்கருளொநோக்கிப்
புந்திமிக்குளாய்தடுததிகொணீயெனப்புகனறுன. [சுசா)

இன்னணம்புகறந்தைபாலிபமுகனுரைப்பா
னின்னருளிதுவாமெனிலெனதுநீள்புழைக்கை
யன்னதறகிலக்காவதோவென்னலுமமலன
புன்னகைபுரிநதருள்செய்துபோவெனப்புகன்றுன். (சுஎ)

நன்றெனப்பரனடிதொழுதைங்கரநாதன்
சென்றுவாரிதியேழுமொன்றுகவேசெறிநது
துன்றுநீரொலாநதுதிக்கையோடுறிஞசமநதரநீள்
குனறுமாமையுங்கரத்தினுட்கூடவெய்திடவால. [சுஅ

பூதலததிடையூநினைபுனலெலாமீண்டு
சிதநீர்க்கடறபுகுநதனசிதரவாமை

மேதினிப்புறங்கிடந்ததுவிண்ணவரெல்லா
மாதரத்தொடுகண்டெம்மனத்துயரகன்றார். (௪௯)

நீடுபார்மிசைக்கிடந்திடுமாமையைநீண்ட
கோடுகொண்டுமெய்குடைந்தனமுதுகினிற்குலவு
மோடுதந்தைபாலடியுறையாகவேயுய்த்தான
மாடுநின்றயனிமையவராவரதனைத்தொழுதார். (௫௰)

வித்தகப்பரஞ்சோதியைவேதநாயகனை
யத்தனைப்பதம்பணிந்தையநீமுனைடமாலைப்
பத்தியோடிந்தவாமையின்முதுகினைப்பறிய
வைத்தணிந்திடவேண்டுமென்றயனவழுந்தினனால். (௫௧)

பரமனுங்கதையெடுத்தணிந்தாளமறைபகரும்
பிரமனேடிமையோரெலாம்பிறங்குவெண்டேசு
விரியவீசினராரத்தெழுந்தேகிவிண்ணனுடின
மருவியாங்குமுன்போலவேமகிழ்ந்துவீற்றிருந்தார். (௫௨)

வேறு.

மற்றவண்கிடந்தவாமைமருவியமயக்கநீங்கி
கற்றைவார்சடையினானைக்கருத்திடைநினைந்துபோற்றிச்
சிற்றறிவுடையேனசெய்ததீவினைதீருமாறு
சொற்றிடவேண்டுமென்னத்தூயவனருள்செய்வானால். (௫௩)

மாயனேயுனக்கிங்குற்றவல்வினைதீரவேண்டி
லாயநற்தலத்துக்கெல்லாமதிகமாங்காஞ்சிபோன்ற
வேய்வனத்துச்சூழ்நெல்வேலிவியனகரதனின்மேவி
நேயமைப்பூசைசெய்வாயென்றிறைவனிசைத்தகாலை. (௫௪)

கண்ணுதலிறைவன்கூறக்கமடமாமுருவினோடு
நண்ணியேதிருநெல்வேலிநகரினில்விரைந்துபோந்தே
விண்ணவர்பணியும்வேண்டவளர்ந்தமாலிங்கத்தோடு
புண்ணியமூலலிங்கப்புனிதனைப்பூசித்துப்போற்றி. (௫௫)

விதிமுறையயனேடுவிமலனைப்பூசைசெய்து
பதமலர்பணிந்துசூழ்ந்துபரவிமுன்னெதிர்நின்றே
மதிபுனைவேணியானேவரதனேமழுவலானே
கதிதருபரனேநெல்லைக்கடவுளேபோற்றிபோற்றி. (௫௬)

ஆலவெவ்விடத்தையுண்டங்கமரருக்கமுதையீந்த
சூலபாணியனே*ஞானசசுருதிநாயகனேமேவுஞ்
சீலமாதவத்தோருள்ளத்திருக்கறவிருக்குந்தேவே
பாலலோசனனேநெல்லைப்பரமனேபோற்றிபோற்றி. (௫௭)

இன்னநற்றுதிகளெல்லாமியம்பிமாயவனுமெங்கோன்
சன்னிதிமுன்புதாழ்ந்துகரந்தலைமீதுகூப்பி

மன்னுமெய்க்குருத்துலிதமாமயிர்ப்புறம்பொடிப்பவார்வந்
தன்னியுட்டழைந்துகண்ணீர்சொரிதர நெஞ்சழியுங்காலை. (௫அ)

கங்கைசூழ்சடையுங்காளகண்டமுஞ்சண்கண்மூன்றுஞ்
செங்கைமானமழுவுமார்பிற்றிகழுமுந்நூலுந்தோன்றும்
பொங்குபாரிடமுஞ்சூழப்புனிதனெல்வேலிநாதன்
மங்கையோர்பாகமாகமழவிடைமீதுபோந்தான். (௫௯)

கண்டனன்மாயனுள்ளங்கனிந்தனன்கண்ணீர்சோரத்
துண்டவெண்பிறையினானைச்சூழ்ந்தடிபரவிநின்று
னண்டர்நாயகனம்மன்பர்க்கத்திகநீயுனதுபூசை
கொண்டனமுனக்குவேண்டும்வரமுண்டேற்கூறென்றான். (௬௰)

பிறையணிசடையாயநான்செய்பிழையினைப்பொறுத்தியுன்ற
னறைமலர்க்கமலபாதநண்ணியெந்நாளுமன்பு
நிறைவுறப்பேதயாதநெஞ்சமுந்தருதிமுன்போ
லுறும்வலியளித்தியாமையுருவினைத்தவிர்த்தியின்றும். (௬௧)

இந்தநெல்வேலிகச்சபாலயமெனப்போமலக்கச்
சுந்தரலிங்கங்கச்சபேசுரனெனவேயோங்கச்
சிந்தையில்வேட்டவிந்தவரமெலாமருள்செய்யென்று
ளந்தணிகுழையினானாலங்கியேமறைந்துபோனான். (௬௨)

மாயனும்வம்பெருமைவடிவதுதொலைந்துமுன்போற்
பாயொளிப்பச்சைமேனிபவித்திரமெய்திமேவுந்
தூயவாலயத்தைநீங்கித்தலங்குபுள்ளரசிற்றோறி
மேயவைகுண்டந்தன்னின்மேவிவீற்றிருந்தானன்றே. (௬௩)

கானலர்துளபமாயன்கச்சபத்துருவிதேனுடிந்
தானினிதெய்தியெங்கோனரனையருச்சித்தவாற்றான்
மேனிலையுணருமேலோர்மேவிவாழ்தருநெல்வேலி
மாநகர்பெயருங்கச்சபாலயமாகுமாதோ. (௬௪)

அரவணைத்துயிலுமாயன்வதாரந்தொறுநெல்வேலித்
திருநகர்தனிலெய்திதிரிபுரமெரித்தமுக்கட்
பரமனையருச்சித்தேத்திவரம்பலபெற்றவாற்றான்
மருவுமப்பதிக்குவிண்டுமாபுரமெனவும்பேராம். (௬௫)

இன்னவாறுருங்கச்சபாலயமகிமையென்றே
சொன்னமாதவத்துமிக்கசூதமாமுனியைநோக்கி
மன்னுமத்தலத்துக்காதையின்னமும்வழங்குகென்ன
வன்னநன்முனிவர்கேட்பவகமகிழ்ந்துரைப்பதானான். (௬௬)

கச்சபாலயச்சருக்கமுற்றும்.

ஆகத் திருவிருத்தம்—௬௲எஎ.

ஐம்புலனுமொருவழியாய்நிறுவியரனடித்தலையே
தம்பமெனநினைந்துருகித்தவம்புரியுஞ்செயல்கண்டே
நம்பர்தெக்கணமூர்த்திநாயகனுமெதிர்தோன்றச்
செம்பதுமககரங்கூபபிசசேவைசெய்துதிசெயதான். [௰௬]

ஆதியாயர்தமுமாயானநதமயமான
சோதியாய்ச்சுடரொளியாய்சொறபொருளாய்ச்சூழுநிலாப்
பாதியாய்வேதபபரியாயுமழுப்படையாய்
பூதியாயசாலிபுரத்தாய்புரப்பாயே. (௰௭)

பத்திசெய்துநிததம்பரவுசனகாதியர்க்கு
முததியருண்மெய்ஞ்ஞானமுததிரையினகைகாட்டி
வித்தகமெயப்பொருளவிரிததுவிளங்குவடதருவினடீழச்
சித்தமுவப்புடனிருக்குநதிகிரிவனததாயபோற்றி. [௰௮]

வேறு.

இன்னதுதிசொல்லுமிராமன்முகநோககி
யுன்னுடையசிநதையுவநதவரங்கேளெனலும்
பொன்னடியின்மேல்வீழநதுபோறறிமகிழகூாந்து
துன்னுவரத்தினமுரைகைவிரிததுச்சொல்லுவான. (௰௯)

பண்டுனதுபாதம்பணிபரசுராமனுககுக
கொணடபகைமுடிககக்கோரமழுககொடுத்தாய்
திண்டிறலிராவணனமுன்சென்றுசெயம்புரிகோ
தண்டமொடுபாசுபதமுநதரவேண்டும். (௨௰]

மேயபகைஞர்விடுபகழியெமமுடைய
காயங்கலநதுதுயர்காட்டாவகைவேண்டு
நேயமுறுசீதைசிறைநீங்கிவரவேண்டு
நாயகனேயிவ்வரநீநல்கிடவும்வேண்டுமால். [௨௧)

பையாடரவப்பணியாய்பலிகவர்செங்
கையாய்கருணைக்கடலேசெழும்பவள
மெய்யாய்மெய்ஞ்ஞானவிழுப்பொருளேவேணுவனத
தய்யாவுன்மீதிலெனக்கன்புநதரவேண்டும். (௨௨)

என்றுவரங்களிவைகேட்டிறைஞ்சியெதிர்
நின்றசிலைராமனிகழ்த்துவரமுங்கொடுத்தே
கொன்றைபுனையுங்குழகனுயாகோதண்ட
நன்றிதருபாசுபதத்துடனேநல்கினான். (௨௩]

ஆயவரநல்கியமலன்மறைந்திடலு
• மாயன்மகிழ்நதுவலஞ்செயதருழ்போநதே

நேயமுறச்சன் னிதியினின் றிறைஞ்சித்தம்பியொடு
மேயமுனியோடும்விடைகொண்டேபாயினனே. ௨௪

சந்தமறைமுனிவனருணிருக்குஞ்சாலையிற்போ
யந்தமுனிவனருளைப்பெற்றடிபரவிச்
சிந்தைமகிழ்ச்சிறந்தவரம்வாங்கி
விந்தைமதங்கப்பருப்பதத்தைமேயினான். ௨௫

வேறு.

வந்திராகவன்வாலியைவதைசெய்துவானரப்படையோடுஞ்
சிந்துவெண்டிரைக்கடலடைத்ததன்மிசைசென்றிலங்கையைச்சூழ்ந்தே
சுந்தரச்சிலைவலியிலவ்வரக்கரைத்தொலைத்துயர்கிகாய
னிந்திரசெயிதுதொடுகும்பகன்னனையிராவணனறனைமாய்த்தான். ௨௬

மாயைவல்லவரக்கர்தாமடிந்தபின்மகிழ்வொடிரகுராம
னேயமாகவேவீடணற்கரசியனிலைபெறமுடிசூட்டித்
தூயகற்புடைச்சானகிதனைநேடுகுழ்கவிப்படையோடும்
பாயதிரைக்கடற்சேதுவில்வந்துதானபரிவொடுமிவைசெய்தான். (௨௭)

மலரினமேல்பன்வழிவருமாக்கனைமாய்த்திடும்பவந்தீரச்
சிலைகொள்வாணுதற்சீதைசெங்கைபிணைத்தர்ச்சிக்குமணற்சிவலிங்க
முலகமெங்கணும்புகழ்ந்திடப்பூசனையுவப்பொடுபுரிந்தேத்தி
யிலகுசெஞ்சடையிராமநாயகனெனவிடமினைவைத்துக்கொண்டான். ௨௮)

பருதிகாதலனனுமனங்கதனுடன்பலபடைத்தலைவோரு
மருகுசூழ்தருவானரப்படையொடுமயோத்திமாநகரெய்தித்
தருமநீதிநலலறங்களோர்ந்தரசளித்திடத்தகைமணிமுடிசூடிப்
பொருவிலாநெறித்துணைவரோடிராகவன்புவிபுரந்திருக்கின்றான். (௨௯)

இனைவாறுசானகிராகவனெல்லாமிறையவனையினிதேத்தி
மனமேமேயவரம்பெற்றிருந்ததையெனமகிழ்வொடுமுறைசெய்தே
பினனுமருந்தலமதன்மைநடந்ததுபெருமைசோகதையெல்லாந்
தனனுமனமொடுமாதவர்கேட்பவேசூதமாமுனிசொல்வான். ௩௰

தசரதராமன்பாசுபதம்பெற்றசருக்கமுற்றும்.

ஆகத் திருவிருத்தம்—௩௬௩௮.

---

## தலமகிமைகேட்டகிர்டனனுக்குப்புத்திரனுதவிய சருக்கம்

நிலவுபணிதியரவுகொன்றைசூடுவிமலரமைவனப்பரமர்நெல்லைநாதர், மலரடியை யனுதினமுமினிதுபோற்றிவாழ்த்தியன்பாய்மகிழ்வுறுமாதவத்திரோரே, யுலகமெ லலாமுய்யமேதினியின்மேல்வந்துற்பவித்தகிட்டனனுண்மையுணர்ந்தேநெல்லைத், த லமகிமைகேட்டுயர்சாம்பனைமுன்பெற்றசரிதையதுகேண்மினெனச்சாற்றினனால

கொற்றமணிப்பொற்பிரம்புகரத்தினேந்திக்குலவுநந்திகட்டியங்கள்கூறியேகச்
சுற்றுபரிசனங்களெல்லாஞ்சூழ்ந்தேயேகத்தொண்டர்குழாந்துதிபலவுஞ்சொல்ல
ப்போந்தார். (௰)

பத்தருறைசிவதலங்களுள்ளதெல்லாம் பணிபுனைவோன்திருநோக்காற் பார்த்தே
போந்தா, னத்திர காசியினுடனேகாஞ்சிபார்த்தா னுடுசிதம்பரமண்ணுமலைகாளத்
திமத்தியார்ச்சுனமாலவாயும்பார்த்தான்மணிகொழிக்குமவையந்திவளங்கள்பார்
த்தான,புத்திதழிபுனைசடையாருறைகுற்றாலம்புனிதநிறைசிந்துபூந்துறையும்பார்த்
தான். (௧௧

வந்துதிருநெல்வேலிவளங்கள் பார்த்தான்வானவருமுனிவோருமகிழ்ந்துபோற்றச்
சிந்தைமகிழ்ந்தியங்களெல்லாம்பூதரார்ப்பத் தேவமடவார்நடனஞ்செயதேயார்ப்
ப, வந்தரதுந்துமியார்ப்பச்சினனமார்ப்ப வடியவர்களார்ப்பவாலயத்துட் போந்
தே, யிந்துநுதலவடிவினொடுநெல்லைநாத ரிலங்குசிங்காசனத்தில் வீற்றிருந்தாரன்
றே. (௧௨

ஆயதொருகாலைகிட்ணன்வந்தானெல்லை யமலனடித்துணைபரவியன்பாய்ப்போற்றி
நாயகனேநம்பானேநமச்சிவாயநல்லமகவெனக்கருளவேண்டுமென்றே
நேயமொடுபுகன்றிடலுங்கருணைகூர்ந்துநித்தனமைவனத்தினெதாங்னறசீதி
மேயதவக்குறுமுனிவன்வதனநோக்கிவியப்புறுநல்லமுதமொழிவிளம்புவானால்.( )

வேறு.

மருவுமிப்புவியின்வேண்டும்வளம்பதிநமக்குண்டேனுந்
திருவளர்திருநெல்வேலிதெக்கணகயிலையாமா
லருடிருவிளையாட்டிங்ஙனனபொடுமநேகஞ்செயதோந்
கருதியித்தலத்துமேனமைகேட்டவாகதிபெறறுயவார். ௧௪)

நீதியனபுடையகிர்ட்ணனினைத்தபுத்திரனுமுண்டா
மாதவமுனியேயிந்தமகத்துவத்தலத்தினமேனமை
போதனுமறியாளீயேயபுகலுவாயிவனுக்கென்றே.
யோதுநான்மறைக்குமெட்டாவிலிங்கத்தினூடுபோந்தான. (௧௫]

கருமுகில்வண்ணங்காட்டுங்கந்தரன்கருணைவாழ்த்திப்
பெருவிருப்பொடுஞ்சென்றுபிறங்குபொறகோயில்சூழ்ந்தே
பொருவினமாவிலிங்கமூலலிங்கத்தைப்புகழ்ந்துபோற்றி
மருமலர்க்குழலாள்காந்திமதியிருபாதம்போற்றி. (௧௬)

மற்றுளதேவர்தம்மைமகிழ்வொடுமினிதுபோற்றிச்
சுற்றுநற்பிரகாரங்கள்சூழ்ந்துசன்னிதியில்வந்தே
நற்றவக்குறியகும்பனநதிநாயகனைப்போற்றி
யுறறதெனபாலங்கெய்தியுவப்பொடுமிருந்தானன்றே. (௧௭).

இனியபொறகுருந்திலேறுங்கிருட்டிணனின்பமான்
மனைவியினேடுஞ்சென்றுவாதனூர்மொழிந்தவாறே

புனிதநற்போருனைச்சிந்தும்பூந்துறைப்புனலிலாடி
நனைமலர்செறியும்பொற்றாமரையினனவீரிலாடி. (௧௮)

மதிநுதல்வடிவாள்கோயில்வலங்கொண்டுமுன்னரெய்திப்
பதமலர்பணிந்துபோற்றிபயன்பொடுவிடைகொண்டேகி
நதியணிவிமலர்நெல்லைநாயகர்கோயிலைச்சூழ்ந்தே
கதிதருமூலலிங்கத்தொடுகழைமுத்தைப்போற்றி. ௧௯)

நாயகர்நாய்ச்சியாரைநலம்பெறத்தொழுதுபோற்றித்
தூயங்கங்காளநாதர்துணையடிவிரும்பிப்போற்றி
மேயவம்பலத்திலாடும்விமலனைவணங்கிப்போற்றி
மாடவனவலங்கொண்டெய்தமகிழ்ந்துசன்னிதியில்வந்தான். ௨௰)

வந்தனன்றுணைவிசாம்பவதியொடுமகிழ்ந்துபோற்றிச
சிந்தையனபோடுகும்பமுனிவனைப்பார்த்துச்சிறந்துவைகிச
சந்திசூழ்திருநெல்வேலித்தலபுராணத்தினமேன்மை
யந்தக்குமபன்சொல்லவகமகிழ்ந்தனிதுகேட்டான். (௨௧)

நித்தமிவ்வாறுசிந்துபூந்துறைநீரிலாடி
வித்தகக்கமலவாவிவிரும்பிநீராடிப்போந்தே
யத்தனெல்வேலிநாதனடியிணைபரவிப்போற்றி
முத்தமிழ்க்கும்பன்சொன்னபுராணந்தானமுடிந்தநாளில். (௨௨)

உளமகிழ்ந்தினிதுதீர்த்தமாடிவந்தோகையோடு
மளவிலந்தணருக்கெல்லாமன்னமதளித்தானமிகக
முளரியங்கரத்தாலீகைமுகமலர்ந்தளித்தீந்தான
இளருமித்தானமெல்லாங்கிருட்டினனீந்தபின்னா. ௨௩)

மின்னவிர்சடையானெல்லைவிமலனார்கோயிலெய்தி
மன்னுநற்பிரகாரங்களைவலங்கொண்டுசூழ்ந்துவந்தே
துன்னுநற்கருணைமூலலிங்கநாதனைத்தொழுதுபோற்றிச்
சன்னிதிமுனபுசென்றுதக்கவொடுபுகழ்ந்துநின்றான். (௨௪)

ஆயதோர்காலைதன்னிலாதபரானந்தகோடி
மேயசெஞ்சோதிமெய்யும்விழிமூன்றுநான்குகையு
மேயமான்மழுவுங்காளகண்டமுமிலங்கத்தோன்றத்
தூயவெள்விடையின்மீதேதுணைவியோடெதிரேகினன்றான். (௨௫)

நெல்லைநாயகனார்மூலலிங்கத்தினெழுந்துநின்ற
வெல்லையிற்சோதிமெய்யுமெழிலையுமெதிரேகண்டான்
முல்லைமாலிரங்கியேத்திமுதல்வனேமுடிவிலானே
நல்லதோர்பிள்ளைதன்னையெனக்குநீநல்கவேண்டும். (௨௬)

என்னலுங்கருணைநாதனியம்புவான்மாலேநீதான
முன்னியித்தலபுராணமுழுதுமீயறிந்ததாலே

புண்ணியமயில்புதல்வன்றனைத்தந்தனம்போவாயென்று
மன்னுயர்மூலலிங்கத்தூடுபோய்மறைந்தானையன். (௨௭)

கொண்டபேருவகையோடுங்குழகனைநினைந்துபோற்றி
யண்டர்கள்பணியுநெல்லையமலனேயாதியானே
தெண்டிரைவிடத்தையுண்டதேவனேயென்றுபோற்றி
வெண்டயிரருந்துமாயனவிடைகொண்டுவெளியிற்போந்தே. (௨௮)

அத்தியமுனிவன்றனையன்பொடுமனுப்பிக்கொண்டு
மகத்துவமனையாளோடுமற்றுளசேனையோடுஞ்
செகத்துயிரனைத்துங்காக்குஞ்சிதரலுலகமெல்லாந்
தொகுத்தபலவளமும்மாந்துதுவாரகைநகருஞ்சேர்ந்தான். (௨௯)

வந்தினிதரசுசெய்துமகிழ்ந்துடனிருக்குநாளிற்
சிந்துரநுதலாள்சாம்பவதிதிருவயிற்றினூடு
சுந்தரக்கருப்பமெய்தித்தூயவொருவரும்போற்ற
விந்திரற்கரசுநல்குமிளவல்போலிளவலீன்றாள். (௩௰)

ஈன்றவப்புதல்வன்பேருஞ்சாம்பனென்றெவருஞ்சொல்ல
வான்றதந்தாதைபோலவறிவுறுபெருமைபெற்றா
னேன்றியகருணைமாயனன்றுயநல்லரசுசெய்து
சான்றவரொருவரும்போற்றத்தயவொடுமினிதுவாழ்ந்தான். (௩௧)

தகவொடுதிருநெல்வேலித்தலபுராணத்தைக்கேட்டு
மகவுபெற்றினிமைபெற்றனமாயவனென்னின்மற்றோ
ரகமகிழ்வோடுகேட்போரமலனற்றனருளாலென்று
மிகபரமெய்திவாழ்ந்தாரென்பதுமெய்ம்மையாமே. (௩௨)

யாவர்களேனுமிந்தத்தலபுராணத்தைக்கேட்கி
லாவலினினைத்ததெய்துமருமகவெய்துமவித்தை
மேவுநற்செல்வமெய்துமவிரும்பியகாமமெய்துஞ்
சீவன்முத்தியையுமெய்துஞ்சிவஞானமெய்துமெய்யாமே. (௩௩)

அண்ணலார்திருநெல்வேலியதிசயபுராணங்கேட்டுக்
கண்ணனார்புதல்வன்பெற்றகதையினைமொழிந்தோமென்றே
புண்ணியத்தவங்கள்செய்யும்பொருவினமாதவர்கள்கேட்பப்
பண்ணவச்சூதன்பின்னும்பரமனார்கதையைச்சொல்வான். (௩௪)

கிட்ணனுக்குப்புத்திரனுதவியசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—௩௲௪௰௨

## பொற்றாமரையின்மூழ்கினபெண்களுக்குப் புடைவைகொடுத்தசருக்கம்

ஆதிநாயகர்நெல்வேலியண்ணலார்விளையாட்டாக
மாதரார்புடைவைதனைமகிழ்வொடுவழங்குகாதை
வேதநான்கெனச்செய்வேதவியாசனார்விளம்புமாறு
சோதமாதவர்கள்கேட்பச்சூதமாமுனிவன்சொல்வான். [க]

முன்னொருகாலங்கோடைமுகிற்றிடுவேனிற்கால
மன்னியதிருநெல்வேலிமாநகர்தனில்வாழு
மின்னிடையமுதச்செவ்வாயவெண்ணகைவிழிமென்கூந்தற்
கன்னியர்பலருங்கூடக்கமலவாவியினில்வந்தார். (உ)

ஞாலமெங்கணுமேவியிருந்தவெம்மையாலும
வாலிபநலத்தாலுமனத்துறுமகிழ்ச்சியாலு
மாலயத்தனமாதர்பொற்றாமரையதிற்சீதநீரிற்
சீலமங்கையரெல்லோருஞ்சேர்ந்துநீராடவெண்ணி. (௩

செய்யவண்ணனீரின்மேன்மைதெரிந்தினிதுவந்துநோக்கா
மெய்யிலாபரணங்கொங்கைமீதணியாரமாலை
கையிலாழிகள்பாதகடகமுங்கிடப்பமாதர்
துய்யபூங்கலைகளெல்லாந்தூயசீர்க்கரையில்வைத்தார். ௪]

அணிதுகில்போக்கிநாணியன்னங்களொதுங்குமாபோல்
மணிச்சுழிகமலவாவிவாசநீரிடையுட்போந்தே
தண்ணுறுமிடங்கடோறுந்தாவியேநீந்துவாரு
பிணைமுலைக்குடங்களாட்டியெழுந்தபின்மூழ்குவாரும். (௫)

மைவிழிசோப்பமேனிவளைந்துதுன்னுறுவாருங்
கைகொடுகைகள்கோத்துக்கலந்துநின்றுறுவாருஞ்
செய்யபங்கயங்கண்மூழ்கத்திரண்டுநின்றுறுவாரு
மெய்யொடுமெய்கள்சேர்த்துவிரும்பிநின்றுறுவாரும். [௬]

தங்கண்மெய்யுருப்பையந்தத்தடாகத்திற்காண்கின்றோரு
மங்குறுபொருளைத்தங்களாகத்திற்காண்கின்றோருங்
கொங்கையிலணிந்தசாந்தக்குழம்பெலாந்துழப்புவாரு
மங்குமின்னிருண்டகூந்தல்வாசநீராக்குவாரும். (௭)

பீனவெம்முலைமேலாரம்பின்னவேயாடுவாரு
நானசிந்தூரமுந்தேயநறும்புனலாடுவாரும்
வானகைக்குருகாலிப்பவாவிநீராடுவாரு
மானனங்கமலமன்றாகமகிழ்ந்தாடும்போதில். (௮)

வேறு.

மின்னைநேர்சடைமவுலியும்விளங்குமானனமும்
பொன்னினார்சிலம்பொலித்தபொற்றாமரைப்பூவுங்
கன்னகுண்டலமுந்திகழ்கழைவனக்கடவுண்
மன்னுமெய்த்தவமாதர்முன்வருவபோல்வந்தார். (௯)

வந்துமுன்புநின்றாடியசெக்கர்வான்வடிவு
முந்துபுன்னகைநிலவும்வெண்ணிலவணிமுடியும்
விந்தையாகமெய்ம்முழுவதுமணிந்தவெண்ணீறுங்
கந்தவாவியினாடுமக்கன்னியாகண்டார். (௰)

அய்யகோவிவரார்கொலோவிங்ஙனமடைந்தார்
மெய்யிலக்கரும்விளங்குவெண்ணீறுமேமிலைந்தார்
துய்யகோலமும்புதிதிவர்சொரூபமெனசொலவோங்
கையில்வைத்திடுகபாலமுங்கவினமுன்னின்றார். [௰௧]

என்றுகூறுவராண்டைகநீரொவாநாங்க
ளின்றுநீர்க்கரையேறவும்வேண்டுமென்சொல்வோஞ்
சென்றுநீரந்தமறைவிடைசெலுந்திகம்பரரோ
நன்றுநீர்நின்றநிலையெனக்கைகொட்டிநகைப்பார். (௰௨)

நல்லனிற்பனரோயுயர்நான்மறைநாளுஞ்
சொல்லுமற்புதரோயுமைதொழுதனம்பொவீர்
நெல்லைவாசரோநாங்கடேசணிந்தபினீதா
மெல்லவாருமென்பாரொளிவிளங்கிழைமின்னார், (௰௩)

இந்தவாறுதான்மாதர்நின்றிரங்கவுமிரங்கா
ரந்தவண்ணர்தம்மருளினாலங்ஙனமணைந்தே
சுந்தரஞ்செறிதூசெலாருஞ்சூழ்ந்தொருசூறை
வந்துகொண்டுபோய்மறைத்ததமடந்தையர்மயங்க. [௰௪]

கரையில்வைத்திடுகலைகளைப்பார்த்தனர்காணா
ருரைமறந்தனர்மயங்கினர்தியங்கினருலைந்தா
ரரையிற்சுற்றுறுமாடையையந்தரச்சூறை
தரையில்வைத்திலையெனசெய்வோமெனத்தவித்தனரால். (௰௫)

வருத்தமுற்றிடுமங்கையர்வாவியங்கரையி
னிருந்தமாடிமுன்னேநின்றநிமலனைநோக்கிக்
கருத்திடையுமைமறக்கிலோங்கருணைசெய்தெங்கட்
கருத்தியுற்றிடவாடைதந்தருளுமினருளீர். (௰௬]

என்றுகூறுவார்பின்னருமியம்புவாரெங்கட்
கொன்றுகூறையையுதவுமன்றேலுயிரிழப்போ
நன்றிநாங்களுமறக்கிலோமால்குவீரொனலுங்
கொன்றைசூடியகுழகனார்கலையெலாங்கொடுத்தார். (௰௭)

இன்பமார்கலைமுன்னர்வைத்திடுமிடத்திருப்ப
தன்பிறேடெதிர்கண்டனரமலனைப்புகழ்ந்தார்
துன்பநீங்கினர்துகிலெலாமருங்குறச்சூழ்ந்தார்
மன்பதைக்குயிராகியவரதனுமறைந்தான. (௰௮)

அன்னகாலையினெல்லைமானகரரசுரிமை
மன்னர்மற்றுளமாந்தருமாதரும்வந்தே
கன்னிமார்தமைக்கண்டனர்கண்களிகூர்ந்தார்
துன்னியெங்கணுநெருங்கினர்விமலனைத்துதித்தார். (௰௯)

ஆதலாலிந்தத்தாமரைவாவியிலடைந்தோர்
நீதியோடுடையுடுத்துநீராடவேண்டு
மாதர்மைந்தாகளாடையிலலாமலவந்தாடி
லேதமுறறெரிநரகிடையெயதுவாரொன்றுர். [௨௰]

பொருனைமாநதிச்சிந்துபூந்துறைபுண்யதீர்த்த
மருகுசூழுமபொறறுமரையதிசயதீர்த்த
மருவியாடிநெலவேலியானமலரடிவணங்கிப்
பரவடிவலிமைப்பணிகுவோரபரகதியடைவார். [௨௧)

திங்கள்வேணியனருளபெறுதெய்வமாதவரே
மங்கைமார்தமககாடையைவழங்கிடுகாதை
யுங்களுக்குநாமறிந்தவாறுரைத்தனமென்றே
துங்கமாதவச்சூதனும்பின்னருஞ்சொல்வான. [௨௨)

பெண்களுக்குப்புடைவைகொடுத்தசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—கூதுாகூச

---

## காமவேதியனுக்குக்காமவேட்கைதீர்த்தசருக்கம்

நீதிசேர்திருநெல்வேலிநிமலனூர்நினைந்துகாம
வேதியன்காமவேட்கைவிகாரத்தைத்தீர்த்தகாதை
தீதின்மாதவத்துமேன்மைசிறந்தவேதியர்களகேட்பச்
சூதமாமுனிவனன்பாய்த்தொகுத்தினிதுரைப்பதானுன். (௧)

உளங்களித்தரம்பைமாதரும்பரும்வியந்துசூழக்
கிளர்ந்தபேரழகுசூழுங்கிளிமொழிமாதரோடு
மிளங்களிறனையமாந்தரிருங்களிவிழவார்வீதி
வளர்திகழ்திருநெல்வேலிமாநகரதனில்வாழ்வோன்- (௨)

வேதியர்குலத்தில்வந்தோன்வேதசாத்திரங்கள்விட்டா
னீதிநன்னெறியும்விட்டானித்தியகருமம்விட்டான்

மாதர்மேலாசைகொண்டேமயங்கியகாமவேத
னுதனூர்கோயிலூடுநலந்திகழவிளக்குப்பார்ப்போன். (௩)

இன்னவாறொருநாளிலெழிலுடைமடவார்தங்க
ணன்னலம்பருகியீந்தானன்மனைவளங்களெல்லா
மன்னதுபோனபின்னரங்கங்கேதிருடியீந்து
மன்னுநற்கோயிலனைம்வழங்கியுமருவினானால். (௪)

இந்தவாறுதவத்தானும்வகையில்லாதிருந்துங்காம
னுந்துவெம்பகழிசிந்தையூடுறத்துளைபபமாழ்கி
யந்தணனுளளம்வேட்டவரிவைதானவைகுமந்தச்
சுந்தரமனையிற்சென்றான்போவென்றுதுரத்தினாளால். (௫)

ஆசையாற்பின்னுமெள்ளவடுத்துவந்திடலுமந்த
வேசைபொன்னுதவாதிங்கேவருவதென்போவெனறோதப்
பாசமும்பற்றுநெஞ்சம்பரிந்தவளபாவைசொலலாற
கூசியங்கிருக்கமாட்டானதிரும்பினனகுழகனகோயில். (௬)

வந்துநெலவேலிவாழும்வரதனைமனததுளெண்ணி
யெந்தையேயென்னையாளுமிறைவனேயிரங்கிநீதா
னந்தநலவெசைக்கீயவரும்பொருளுதவுமெனபான்
றந்திடாதொழிந்தாலுனமுனசடுதியிறப்பெனனபான்- (௭

இன்னணமெண்ணியெண்ணியிதையமுங்கண்ணியேங்கி
யன்னமுமருந்தானாகியான்றொருதினமும்வைகிக
கனனலுக்கொடுகான மே கமபி ழுக்சணைநீவாரப
பன்னிநெஞ்சழிந்துவேறுபரவசமடைந்தகாலை. (௮)

வேறு.

கறைமிடற்றவன்கழைவனக்கடவுள்கண்டிரங்கி
யறவுங்கந்தையையாடையாயணையினிற்சூழ்ந்து
செறியுநன்மணிப்பதக்கமுஞ்செங்கையினேந்தி
மறையவருருக்கொடுமுதுவயதினனவந்தான். (௯)

வந்துநோக்கிநீயார்புகல்வரதனைநினைந்தாய்
சிந்தையுற்றிடுதுயரமென்செப்பெனச்சொல்வா
னந்தணனேபெண்களுக்காசைகொண்டயர்ந்தேன்
விந்தைமாதருக்கரும்பொருள்கொடுத்திடவேண்டி. (௰)

என்னையாளுடையிறைவனையிரந்திவணிருந்தேன்
மன்னுமென்செயலிதுவெனமறையவனபுகல்வான
கனிபாகனையுபாதிப்பதேனிதுகருமந
துன்னியநகவனிணங்கயான்சொல்வன்வாவென்றான். (௰௧)

களமிருண்டவன்முன்செலக்காமவேதியனு
முளமகிழ்ந்துபின்செல்லவங்கவளுறைமனையிற்
றுளவனும்மறியாப்பதச்சுவடுதோய்ந்திடச்சென்
றளவில்வந்தெதிர்நின்றிடுமரிவையைநோக்கி. [௬௨]

மங்கைநீயிந்தவேதியன்றனைமனமகிழ்ந்து
கொங்கையாரவேயணையெனப்பதக்கமுங்கொடுத்தே
சங்கைதீர்த்ததிருவோலையுந்தடவுறப்பொருத்தி
யெங்களுயகனிலக்குப்போற்கோயிலெய்தினனால. [௬௩]

அளவில்பற்பலவண்டங்களேவையுமேயளித்து
விளையுமாருயிராவையுங்காத்திடுமேலோ
னெளியனாகவோர்வேதியன்முன்னமெய்தினனா
ழுளைவனத்தவனருளையாமொழியவல்லாமோ. [௬௪]

என்றுருத்தனிக்கதையினையியல்பொடுமியம்பித்
துன்றுமாதவர்கேட்பவேதுலங்குசெஞ்சடைமேற்
கொன்றைசூடும்வாறுவாதத்தியார்போலுருக்கொண்டே
யொன்றுமைந்தரையோதுவித்திடுகதையுரைப்பான். [௬௫]

காமவேதியன்காமவேட்கைதீர்த்தசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—௩,௲௭௬௩

---

## உபாத்தியாயராகவந்துபிராமணப்பிள்ளைகளை ஓதுவித்தசருக்கம்

முதியவந்தணர்மாதவர்மூதறிவோர்கள்
கதிவிரும்புறுநித்தியர்கருணைமெய்யடியா
ரதிவிருப்பொடுமெங்களுநிறைந்திடப்பரவ
நதிமுடித்தவன்வாழ்திருநெல்லைமாநகரம். (௧)

இந்தமாநகரத்திடையிருப்பிறப்பாளா
புந்திமிக்கவர்பெற்றிடுபுதல்வரெல்லோருஞ்
சிந்தையன்புறுபுத்தியுமவித்தையுஞ்சிறப்பச்
சந்தமாமறையோதுவிப்பாரின்றித்தளர்நாள். (௨)

மாதுபாகனுர்வாழ்திருக்கோயிலினெய்தி
யாதிநீயெங்கட்கருள்செய்தபுதல்வர்களெல்லா
நீதிநல்லறிவுறமறைநெறிமுறையறிய
வோதுவித்திடுமுபாத்தியாரருளெனவுரைப்பார். (௩)

இன்னவாறுதானித்தமுஞ்சென்றியம்பிடுவார்
துன்னுமைந்தரைநோக்குவார்சோகமுற்றிடுவா
ரொன்னலார்புரங்காய்ந்தவனோதுவித்திடுவானை
றனையெந்தகாளருள்செய்வானென்றுளந்தளர்நாள். (௪)

திருநெல்வேலியிற்சிறந்துறைதிங்கள்சூடிறைவன்
பரியும்வேதியர்பருவரநீர்த்திடநினைந்தோ
பொருவின்மைமாதர்கண்முனைசெய்தபுண்ணியத்தாலோ
கருதிருக்கினுட்பொருள்சொலுங்காரணத்தாலோ. (ரு)

பூதிவெண்பொடிமேனியும்புத்தகக்கரமுந்
தூசுகலைதயுந்துலங்குமுநூலணிதோளும்
வீசுதண்டமும்விளங்கிடவிருத்தவேதியன்போ
லாசமில்லவன்பூசுரர்வீதியினடந்தான். (சு)

நடைதள்ளாடமெய்ந்நடுக்கமுற்றிடநரைதிரைசூ
ழுடல்வளைந்திடமூப்பினுலுழைதமொற
வடையும்வேதியனூர்கொலென்றதிசயமெய்துங்
கடவுள்வேதியரவையினிற்கண்ணுதலிருந்தான். (எ)

இருந்தபோதந்தவேதியரிறைவனைநோக்கி
வருந்தபோதனமுனிவர்நீர்யாரொவர்வழிகாண்
பொருந்துறுங்குலமேதுசொல்வீரிவணபோந்தீர்
திருந்துமூரொதுபெயரொதுசெப்புவீரென்றார். (அ)

வேறு.

மூதறிவுடையீர்நமதுபொற்பதிதான்முத்தமிழ்க்காஞ்சிமாநகரம்
போதமெய்த்தவததோன்புலத்தியமுனிவனபுனிதனன்மரபினில்வந்தோ
நீதிசேர்நெல்லைமாநகருறைவீர்நெறியுறுபிள்ளைகளுண்டே
லோதுவிததிடுவோமுபாத்தியார்நாமென்றுரைததனனுமையொருபாகன். (க)

என்னலுமறையோர்மனமகிழ்ந்திசைப்பாரிததலத்தினிதிருேடிருந்தே
மன்னுநறபுதலவர்தமையெலாநீரோவளம்பெறவோதிவிப்பீராற
றுன்னுசெம்பொனனுமாடையுங்கலனுநதூயநெற்குவையொடுநிலனும்
பினனும்வேண்டியநல்வளங்களுந்தருவோமெனனலும்பிஞ்ஞகனபுகல்வான். (ம)

மங்களமானவளமிகப்பொருந்திவாழுமநதணர்களேமகிழ்வா
யிங்குநீருரைத்தயாவையும்வேண்டாமெமக்குவேண்டிடுவதேதெனிலோ
தங்குறறினத்துக்கோர்பொழுதன்னநதருவதேபோதுமென்றியம்ப
வங்கதற்கிசைந்துபுதல்வர்கடம்மையவருழையோதிடவமைத்தார். (மக)

சுந்தரக்கழகமமைத்தனர்வீடுதோறுமொவ்வொருதினமடிசில்
சிந்தையன்போடுமளிததிடவமைத்தார்திங்கள்சூடிறைவனுமுவந்தே
யந்தவாறினியமனைதொறும்போய்ப்போயன்னமதருந்தியெந்நாளு
மந்திரமறையோர்புதல்வர்கடமமைமகிழ்வுடனோதுவித்திருந்தான். (மஉ)

இவ்வகைகருணையிறையவன்மகிழ்ந்தேயிருந்திடுநாளிலங்கொருநாட்
டிவ்வியமாகச்சிறப்பொடுநினைந்தோர்திருவிளையாட்டிதுசெய்தா

னவ்வியமகன்றமறையவரொவருமன்பருமதிசயமுறவே
நவ்வியங்கண்ணனல்குரவுடையாணன்மனைமுறையராண்ணி. (௰௩)

மதிநிகர்வதனவஞ்சியேயெனக்குவயிற்றுறுபசியுமொகோரம்
பதயினிதருள்வாயெனவனுமாதப்பாவையும்பரிவொடுநோக்கிப்
புதியவேதியரிங்கிருங்கணபபோதிறபோனகமிடுவனென்றுரைப்பக
கதமொடுசீறியிருந்ததுகொடுவாகடிதெனக்கலங்கியீதுரைததாள். (௰௪)

ஐயயோயிஙனிருப்பதுபழையவடிசிறண்டேலயென்றறையத்
துய்யனுங்கொடுவாவெனனலும்பழையசோறெலாமிடுநதொறுந்துய்த்தே
பெய்வளையின்னமிருடபதுகொடுவாவென்னலும்பெண்கொடிநடுங்கிக்
கையினிலெடுததவரிசியுங்கறியுஙகனிநதசெங்கனிகளும்படைததாள். (௰௫)

அங்கதுவருந்திப்பின்னருங்கொடுவாவென்னலுமஞ்சினளோடி
மங்கைதனவீட்டுக்கயலுறுவீடுமறறுளமனைகளும்போயப்போயப்
பொங்குஉல்லடிசினெல்லொடுபுலனுபபுகனறிடுதானியமெவையுஞ்
சங்கையிலாதுகொடுவநததுணடுநதனபசிதணிநதிலையெனறுன. (௰௬)

கண்டுமெயநடுஙகியதிசயமெய்திககலங்கினனுனினிமேறறுன
கொண்டுவநதிடவுமெங்கினிப்போவேனெனறுகூவெனமுறையிடலும்
பண்டருமறையோராயாவருங்குழுமிபபரிவொடுவநதுபாாததிடலும்
விண்டுநான்முகனுங்கணடிலாவிமலனவிளஙகொளியுருவமாயமறைநதான் (௰௭)

வேதியரொவரும்வேதங்கண்மொழிநதார்விண்ணவர்பூமழைபொழிந்தார்
பூதிமெய்யடியார்புகழநதனராாததார்பூதர்களியமபலவார்த்தார்
சோதிநம்பரனைமுனிவராதுதிததாாதுளளினராடினரார்ததார்
நீதிமனனவருமற்றுளோாயாருநினைநததிசயமெயதியார்ததார். (௰௮)

நாயகனபால்வநதோதியபுதல்வாஞானமாமுனிவரேயானூர்
மேயவநதணர்கள்யாவருமின்பமிகுநதிடுசெல்வராய்வாழ்நதார்
தூயநெலவேலிநாயகனறனக்குத்துலஙகுநலலமுதெனும்பருத்தை
நேயமோடீநதநேரிழையாருநிகரிலாபபெரும்பதமடைநதார். (௰௯)

இனனதாமிநதக்கதையினைகேட்போரின்பவீடெய்துவரெனறே
துன்னுநன்முனிவர்க்கினிதொடுமுரைத்தசூதமாமுனிவரன்றுாய
நன்முனிவரோநலநிகழ்நெல்லைநம்பனூதிருவிளையாட்டின்
மன்னுநறகதைகடனனிலெககதையைமகிழ்நதினிதுணாபபதென்றுரைத்தான். ௨௰

உபாத்யாயராய்வந்துபிள்ளைகளை யோதுவித்தசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்- ௬௲௩௱௯௰ (?) 

---

## பாடுவான்மகன்றுயரந்தீர்த்தசருக்கம்.

சுருதிமொழிமாதவத்தோர்களசூதமுனிவன்முகநோக்கிப்
பருதியிருளைத்தொலைப்பதுபோற்பாவவிருளைத்தொலைக்குமரன்
சரிதையதனிலினனெல்லைத்தலத்துமகிமைசாற்றெனலும்
பொருவில்கருணைப்பாடுவான்புதல்வன்கதையைப்புகலகின்றான். (க)

பொன்னாகமலப்பொன்மானும்பூவாகமலப்பூமானும்
பன்னாட்பன்னுமலரேந்திப்பரவியருச்சித்திடுபாதன்
கொன்னார்வேற்கண்வடிவுடையகோதைமகிழுங்கோலத்தான்
மின்னார்சடையானுறைதிருநெல்வேலிநகரில்வீற்றிருப்போன். (உ)

புந்திமிகுமைம்புலனுடையான்புரத்திலணிவெண்பொடியுடையா
னந்திநிறத்தான்கதரடிமையாளேனரவபாலனபுடையோன்
சிந்தைமகிழ்முத்தமிழ்பயில்வோனறேனுமபாலுங்கலந்தெனப்
பந்தநிறைதந்திரிவீணைபரிவாயப்பாடும்பாடுவான். (ங)

அன்னோன்வாமசாரனெனுமருமைமகவைபெற்றெடுத்தான்
மன்னுமவனுக்கீரெட்டுவயதாமபருவம்வருநாளிற்
கன்னமதவேளனையானுங்கலவிபுரியுஞ்சருத்தனாய
மின்னினிடையார்க்காசைகொண்டுவிரகத்துயரான்மெலிவுற்றான். (ச)

இந்தவகைதானெண்ணினமடவாரைக்கூடியினிதிணங்கிச்
சிந்தைமகிழ்ந்துமதனூல்கொக்கோகமுதலசிறந்துகற்றே
யந்தவகைசெய்தரிவையருக்காசைபூட்டியணைகுதலால்
வந்துசெறிந்தமனைவளங்களெவையுமவர்க்கேவழங்கினான். (ரு)

தங்குமனைசேர்வளங்களெல்லாந்தானேபோனபின்புமதன்
செங்கைப்பகழிக்கொடுங்கூற்றுற்றினமுந்தியங்கித்திருவனையார்
கொங்கைச்சுவடுதனைநினைவான்கொடுக்கநிதியின்றுகுவைகாணா
னெங்குந்திருடிநல்லார்க்கீந்துதிரிநாளினிலொருநாள். (சு)

விதியின்வழியேவ்வினைப்பகுதிவிளைவதோரான்விறல்வணிகன்
கதிர்செயமணிமாளிகைபுகுந்துகனகமணிசேர்கலனிறைந்த
புதியதொருபொட்டகமெடுத்தான்புளகித்துடலம்பூரித்தா
னதுகவிருட்பினெடுங்கொடுபோயாசைமடவாடனக்களித்தான். (எ)

வாங்கியவள்பொற்பொட்டகத்தைமகிழ்ந்தாள்களித்தாண்மனங்குளிர்ந்தா
டாங்கியணைத்துவாமசாரனைத்தான்பார்த்தாடயவுடனே
நீங்காதினிநானுனைத்தானேநித்தமணைவனெனத்திரண்ட
கோங்கார்முலைமார்புறவழுத்திக்கோதைதினமுங்கூடினாள். (அ)

காமமிகுந்திங்கிருவோருமிரவும்பகலுங்களிப்புறமுன்
வாமசாரன்கொடுபோந்தமறுநாளந்தவணிகேசன்

சேமஞ்செய்தமணிக்கதவுதிறநதுகிடப்பத்தான் கண்டான்
ருமந்திகழ்பொட்டகமிருநததலததைப்பார்த்தான் றளர்வுற்றுன். (க)

ஏங்கிமனதுகலங்கிமணியிழநதவரவொத்திடொய்தி
யாங்கணெவருமறியவுரைததவரோடரசனவையெய்தித்
தீங்கிலரசர்பெருமானேசேமகததவுதிறநதிரவி
லோங்குமணிபபொட்டகததையெடுததொளித்தாரொவரோவெனவுரைததான். (ய)

அந்தவணிகனிதுபுகலவரசனகாவலர்கருரைத்துன
சிநதைமகிழவழைபபிதநுதருவோமெனறுசெபபி - லும்
வநதுவணிகேசனுநதனநுமனேயினிடதத்தைவிஞு
னிநதவகைதானறியாமலிலகுமணிபபொட்டகநதிறநதே. (யக)

கருதிமணிப்பூணென்றையநதக்கணிகையெடுத்தங்காடியிறபோய்த்
தருபொட்டகம்போக்கினவணிகனறனபாறகொடுத்துவிலேகேட்டா
ளுரியபணிதானிதுவுநமதுடையபணியெனறுளததெணணிப
பெருகுமொளிசேர்பணியிதனைபபெறறதெவர்பாலுரையெனறுன். (யஉ)

மங்கைபுகலவாளபாடுவானமகனபாறபெறறேனெனமொழியநு
திங்கணுதலாயிதுநமதுபணியாநதிருடிககொடுபோநதான்
பொஙகுமணிசூழ்பணிநிறைபொட்டகமதொனறுபோனநுதா
னெஙகோகொடுவாவெனவுரைததாணிரஙகியேஙகியெநுாகினறுள். (யங)

வேறு.

ஒன்றுமுரையாமலணியுள்ளதுவுஞ்சொர்ணம
ணின்றவளேமுகநோககிநேரிறைஞ்சிறபதென்று
னனறுனதுசெயகையெனநஙகையவளொடுடநது
சென்றரசனமுனமெய்திச்செய்தியெலலாஞ்செபபினனுல. (யச)

அவ்வுரைகேட்டரசனநதவணியிழைதன்முகநோககித
திவ்வியநற்பணியிருநதசெம்பொனமணிப்பொட்டகததை
யெவ்வமுறவாஙகிவைததாயினியெடுததுவாவெனலுமம
வவ்வுமணிப்பொட்டகத்தைவஞ்சிகொடுவநதுவைத்தாள. (யரு)

மற்றுமநதப்பாடுவான்மகன்றனேயுங்கொடுவநதே
யுறறதுரையெனலுமவனுளளபடிநடநததெல்லா
முற்றுமொழிநதிடலுமணிமுடிவேநதனிருபேருஞ்
சொற்றதுமெய்விடுதியெனவணிகனெருருகுதுரைத்தான். (யசு)

மன்னுமுயர்பொட்டகத்தோர்வலேகாணேனெனவுரைப்ப
வன்னவரைமுகநோக்கியவ்வலேயெங்கேயெனவே
சொன்னவலேதனேவாங்கததுணிநதவடாளறுனேக்கொண்டு
தன்னிகரில்வாமசாரனேயரசனறண்டிததான். (யஎ)

இங்கிவனைச்சிறையிலிடுமெனவிறைவனசொலவுமுடைய
ரங்கவனைச்சிறையினில்வைத்தடுத்தளையும்பூட்டினர்
பங்கமுறுமகன்வருத்தம்பாடுவான்செவிபுகலுஞ்
சங்கையிலாத்துயரினொடுதற்பரனாலயமடைந்தான். [௰அ

வேறு.

வந்தனவரதநாயகர்மணிப்பொற்கோயிற
சுந்தரத்தென்றல்வாயினின்றுதோத்திரங்களசொல்வா
னிந்துபொறசடைமுடியிறைவனேயெவர்கருமேலா
யந்திவண்ணத்தினனேயமலனேயரனேபோற்றி. [௰௯)

கன்னல்வில்வேளைக்காய்ந்தகனல்விழிநுதலினனே
புன்னகையாலேமூன்றுபுரமெரித்தவனேபோற்றி
பன்னகப்பணியினனேபரமனேபரையோர்பாகா
மின்னவிர்சடையாய்போற்றிவேணுநாயகனேபோற்றி. உ௰)

என்றுநற்றுதிகளசொல்லியிணையடிபணிந்துபோற்றி
மன்றினிலாடுவோனேயெனக்கொருமகவுதந்தா
யின்றவன்றன்னைவேந்தனிருஞ்சிறைதனனிலிட்டே
கொன்றிடநினைந்தானுங்கூடவேயிறப்பேனென்பான். உக)

கையினில்வீணையேந்திக்கானங்கள்பலவுமிசைப்ப
னய்யனேபோற்றியெனபானுனந்தக்கண்ணீரவார
மெய்யுறுபுளகமெய்திவிம்மியென்னய்யன்பாத
செய்யதாமரைமேலனபுசெலுத்தியங்கிருக்கும்போதில். [உஉ

நம்பரனமலனெல்லைநாயகன்கயிலைவாச
னம்பிகைபாகனெங்கோனண்டகோடிக்குநாதன்
பம்புநல்வீணைதாங்கும்பாடுவான்பாங்கினெய்தி
யும்பரும்வியப்பச்செம்பொனொளிர்மணிக்கடகமீந்தான். (உ௩)

கைவளைகரத்திற்கண்டான்கருணைநாயகனைக்காணு
னய்யனைத்துதித்துப்போற்றியாலயம்வலங்கொண்டேகித்
துய்யவேய்முதலைமூலலிங்கத்தைத்தொழுதுபோற்றி
மெய்ம்மைசேர்மற்றுமுள்ளதேவரைவியந்துபோற்றி. [உச)

நந்திநாயகனைப்போற்றிநலம்பெறவீதிசூழ்ந்தே
வந்துயர்வணிகனறனபாலவளையினைமகிழ்ந்துநல்கப்
புந்தியில்விருப்பமெய்திபுரவலர்க்கறிக்கைபண்ணித்
தந்திரவணிகன்வாமசாரனைச்சிறைவிட்டானல். [உரு)

விடுத்தபின்பாடுவானும்விரும்புதன்புதல்வனோடு
மடுத்ததனமனையிற்போந்தானந்தநல்வணிகனறனபாற்
கொடுத்திடுவளையைமிககோலநனமனையினெய்தி
வடித்தபொறபணிகள்வைக்கும்பொட்டகமதனில்வைத்தான். [உசு)

இத்தலமதனிலிலகுநான்மறையோரிருங்குலமரபினில்வந்தோ
னித்தியகருமநியமமுமறந்தானீதியின்னெறியினைமறந்தான்
பத்திரமறைகள்படிப்பதுமறந்தான்பனவர்செய்தொழிலெலாமறந்தான்
னத்திரவிழியார்க்காசைகொண்டயர்ந்தானந்திவிட்டனெனும்பெயர்பெற்றான். (௨)

இன்னவாறினியமாதரைக்கூடியின்பமேயனுபவித்திடுவான்
முன்னியங்கொருநாளொருத்திதன்மனையின்மோகமாயச்சென்றவளோடு
மன்னுறுகலவிசெய்துபின்றுயிலகூர்மயக்கினில்வாய்புலர்ந்திடலுந்
துன்னுமத்தோகைதனைமுகநோக்கித்தூயநீரளித்தியெனவுரைத்தான். (௩)

பூங்கொடிதானும்பொருக்கெனவெழுந்துபுசித்துமுன்மிஞ்சியங்கிருந்த
தீங்குறுசுரையைவெறியினாலெடுத்துச்செலமெனவெண்ணியவவேதன்
பாங்குறவந்துகொடுத்திடவாங்கிப்பருகியபின்னபதினவேக
மாங்குவாய்கதித்திடவறிவழிந்தானய்யகோவென்செய்தாளென்றான். (௪)

அஞ்சினானயர்ந்தானயலுளோர்தாமுமறிவரோவென்றிருந்தழுதான்
வஞ்சிநீசெய்தவஞ்சனையிதனான்மாய்ப்பனென்னுயிரையென்றிசைப்பா
னெஞ்சறிவழிவானபலபலநினைவானிலத்திடைவீழ்ந்துநெட்டுயிர்ப்பான்
றுஞ்சிடாதின்னமிருந்தனனெனவேதுணுக்கமுற்றேங்கினன்சோர்வான். (௫)

மாதுநீயிந்தமதுவினைநல்கிவஞ்சகம்புரிந்திடும்வகைதா
னேதுசொல்லெனலுமேந்திழையிசைத்தாளென்னுயிரனையவேதியனே
சாதிமுன்னருந்தும்வெறியினாலுனக்குத்தண்புனலிதுவெனத்தந்தே
னோதியவாறதையுண்மையென்றுரைப்பவுணர்ந்தனன்பின்னருமுரைப்பான். (௬)

வெறிமலர்க்குழலாயுனக்குறுவெறியால்வெறிமதுவளிப்பநானருந்தி
மறையவர்குலத்துக்கிசையலேனிந்தவசையுநிந்தனையுமவையும
பிறிகிலாதெனவேயெனசெய்தானென்றேபெரியவரிகழ்ந்திடப்பெற்றேன்
மறுமையுமிழந்தேனென்செய்வேனெனவேமயங்கினான்றியங்கினான்மறையோன்.

இந்தவாறேங்கியிரங்குதல்கண்டோர்யாவருந்தேற்றிடத்தேறா
னந்தநற்கணிகையாற்றவுமாறானவளைநொந்தாவதேதெனவே
வந்துவேய்வனத்தோர்மரத்தின்கீழிருந்தேவருந்தினன்மறையவன்வருத்தஞ்
சிந்தையுற்றறிந்துதீர்ப்பவர்போலச்சேணிடைத்தினகரனெழுந்தான். (௮)

காலையிலெழுந்துமயிர்வினைகளைந்துகடிதுசென்றிரும்புனலாடிச்
சீலமின்மதுவையருந்தியபாவந்தீரவதெப்படியெனத்திகைத்தே
நூல்புகன்மறையோரிருந்திடுமவையைநோக்கியங்கெய்திமுன்னின்றே
யாலமுண்டவருக்கன்பரோயெனமேலன்புவைத்தருளுமென்றுரைப்பான். (௯)

சிறியனேன்காமச்செருக்கினான்மடங்கித்தெரிவையர்சேரிசென்றங்கே
யறிவிலேன்மதுவைநீரெனவுண்டேனாதலாலிங்குநானடைந்தேன்
வெறிமதுவருந்துபாவமதகலவிதித்ததெவ்வணமெனவிளம்ப
நெறியுறுமறையின்பொருளினையுணர்ந்தநீதிசேர்மறையவருரைப்பார். (௰)

அதிவிடஞ்சுமறையவனீ தானுவினெய்யன்பொடுகொணர்ந்து
புதியநற்றகழியதனிடைவார்த்துப்பொங்கெரியடுப்புறவைத்தே
கொதியிடக்காய்ச்சிக்கொதிப்பகலாமுன்குடித்திடவேண்டுநீகொண்டான்
மதுவினையருந்துபாவமதகலுமென்றனர்மறைமொழிவல்லோர். (௰௧)

என்றிவைபுகலக்கேட்டவேதியனுமினிதெனமகிழ்ந்தவைசெய்வா
னொன்றியமனத்தானுவினெய்கொணர்ந்தங்கோர்குடசெந்தீயிடைவைத்தே
நன்றுடன்காய்ச்சும்போதவன்றந்தைநடுங்குடலவிருத்தனாயெய்தித்
துன்றுநற்புதல்வாநீசெய்தபாவஞ்சொல்லெனத்தாதைமுன்சொல்வான். (௰௨)

எந்தையேநானோரிலங்கிழைமனையிலெய்தியங்கிருந்திடுபோதி
லந்தநற்கணிகைநீறொன்மதுவையளித்திடவருந்தினேனதனா
லந்திடுபாவந்தொலைந்திடமறையோர்வகுத்தனராகொதித்திடுநெய்யைச்
சிந்தையனாய்ப்போய்க்குடித்திடென்றுரைத்தாரிங்கிதுசெய்யவேயிசைந்தேன். ௰௩)

என்னலுமேங்கியிரங்கியேயழுதானென்னினைந்தென்செய்தாய்மகனே
பன்னுநானம்மறையோருளங்கிதுசொன்னோர்பழிபகர்ந்தனரவாபாருனா
றுனனியிங்கெளிதாயசெயுமவிதகேட்டிதத்துயாதவிதத்துவனவாயென்று
தனனுடைமகனுந்தானுமேசென்றுசதுமறையவரிடஞ்சார்ந்தான். (௰௪)

ஆங்கவர்தம்மைவணங்கியேதாதையருமறைமுனிவரோசிறியோன்
றீங்கதறுமதுவைக்குடித்திடுபாவந்தீரநெய்குடித்திடச்சொன்னீ
ரேங்கியெனபுதல்வனிறந்திடுமதனாலெளியதாயவித்ததிடவேண்டு
நீங்கடானுரையுமென்னலுமன்னோர்நெறிமறைதேர்ந்திவைபுகல்வார். (௰௫)

முதுமறைமுனியேயுன்றனபுதல்வன்முனனியேமதுவினையருந்து
மதிகமாமபாவந்தீரப்பிராயசித்தமேயன்றிவேறில்லையென்றுரைப்ப
மதிமயக்குற்றுவருந்தினன்றந்தைமனந்துணிந்திடுமகனசொல்வான
யுதியவிப்பாவமிதனைநெய்யருந்திப்போக்குவேனயானெனப்போனான். ௰௬)

இழுதுமுன்காய்ச்சுமிடத்தினில்வந்திங்கினிதுடனருந்தவேயிருந்தா
னழுதுயரோடுமெய்தியதாதையாற்றவுமவனதுகேளா
னொழுகுசெந்நெய்கொண்டவனருணிங்குயிரபிழைத்திருக்கவுமாட்டான்
குழுமியமறையோர்கெடுத்தனர்யானுங்கூடவேயிறப்பனென்றெண்ணி. (௰௭)

தாதைதன்மனைசேர்வளமெலாமறையோர்தமக்குடன்றானங்கள்பண்ணி
மேதினிதன்னிற்குழிசமைப்பித்துவெந்தெரிதீயினைமூட்டி
யோதுமத்தீயில்விழுந்திடப்போம்போதுற்றதன்மனைமகனமனையுந்
தீதிலிங்கிருவர்தொடர்ந்துபின்வரவேசென்றுதீக்குழியிடைவந்தார். (௰௮)

வந்துநற்றயுந்தந்தையுந்தீயைவணங்கியேவலஞ்செயும்போதிற்
சுந்தரமுனிசாண்டிலயர்தாம்வந்துதூய்மனறமுனிவனைநோக்கி
யிந்தநற்றீயைவலஞ்செய்வதேதிங்கியம்பெனத்தன்மகன்செய்தி
புந்தியன்போடுடன்றனமொழியப்புனிதனாமுனிவரன்புகல்வான். (௰௯)

வேறு.

மறையவனேயுன்றனுடையமகன்றனக்குவருபாவ
மறவுமினிவேறுபிராயச்சித்தமதுபுகல்வோ
முறையுமிந்தத்தீக்குழிவிட்டிடணவாருமெனவவருந்
திறமுடனேவரமுனிவனசிறுமறைவனிடஞ்சென்றான். (௨௰)

கொதித்திடுதப்பருந்தமகிழ்கூர்ந்திருந்தோன்றனைநோக்கி
மதித்திடாதருந்தமதுவால்வருபாவமபோக
விதித்தவாபால்வாவென்றானவேறுபிராயச்சித்த
முதித்தவகைசொல்வோமெனறுயர்மறையொர்முன்புவந்தான் (௨௧)

வந்தமுனிவரன்றன்னைமறையவர்கடொழுதேத்திச்
சிந்தைமகிழ்ந்துடனிருப்பத்தெய்வமுனிவரன்புகல்வா
னிந்தமறைச்சிறுவனமதுவெடுத்தருந்துபவந்தீர
வந்தணரோசெந்தழனெய்யருந்தெனவேயருள்செயதீர். (௨௨)

பவமதொழிந்திடநீங்கள்பகர்ந்திடுமாச்சியம்பருகி
லிவனுடனேயிறப்பனிவனில்லொடிவர்தாமிறப்பார்
புவனமதிலவேறுதலம்பொருந்தினவர்போலுமைதநீர்
சிவனுறைநெல்லையிலுறைவோாசெய்பாவந்தீர்ந்திடுமால். (௨௩)

ஆதலினெல்வேலிநகரதிசயமாரறிவொன
மூதுணருஞ்சாண்டில்யமுனிவரனுமொழிகுவான்
கோதிலுயர்சிவதலங்கள்கோடிகொடுத்திடுபலனைத்
தீதிலாவேணுவனச்சேத்திரமேநல்குமால. (௨௪)

மருவுபலதலந்தோறுமகிழவிமலனுமினிதுசென்றே
பொருவிலொருகோடிலிங்கம்புகழ்ந்துதெரிசித்தபல்ன
விரைமலரால்ருச்சித்துவேணுவனத்துடையனுந
திருமாலும்பரவவருள்சிவலிங்கமுதவுமால. (௨௫)

வடகங்கைதனினூறமடங்கதிகம்பொருநைநதி
கடவுளர்கள்படியுமணிகன்னிகைக்காயிரமடங்கு
திடமதிகஞ்சிந்துபூந்துறையதனுக்கெழுமடங்கு
படிமிசையிலதிகம்விண்ணோர்படிந்திடுபொற்றாமரையே. (௨௬)

சத்தநதிமுதலானசருவதீர்த்தங்களுந்தா
னித்தமுந்தப்பாதுவந்துநீராடிப்பவந்தொலைக்கும்
புத்தமுதவானதியும்பொருநதியினிதுறையுமிந்த
வித்தகப்பொற்றாமரையின்மேன்மையெவர்விளம்புவார். (௨௭)

ஆதலாலிந்தமறையவனருந்துமதுவதனு
லோதுகொடும்பவம்பொற்றாமரைப்புனலுண்டாலொழியுங்
கேதமிலீரகத்தியர்காத்தியரிவரைக்கேளுமென்றே
நீதிசிறந்திடுமுனிவனிருவரையுநினைத்தனனால். (௨௮)

அன்னமுனிவரர்தாம்வந்தந்தணர்கள்பேரவையின்
முன்னரவணிருந்திசைப்பார்முதுமறையோன்பவந்தீர
மன்னுமுயர்சாண்டில்யமாதவத்துமாமுனிவன்
சொன்னமொழியிதுநன்றுமெனவிடந்துசொல்லுவார். (௧௯)

வேறு.

இந்தநெல்வேலிதன்னிலிருந்தவர்தமக்கெந்நாளும்
பந்தமாம்பாவமில்லையிவனுக்குப்பாவமுண்டோ
முந்தியபிராயச்சித்தமொழிந்ததென்முனிவர்கேண்மின்
வந்துலாவியபூம்பொற்றாமரையானவடிவாலகும். (௨௰)

இவ்வகையறியோநெல்லைபேடமபுட்கரணிமேனமை
திவ்வியமுனிவர்நீங்கள்செப்பிடவறிந்தோமெங்கள்
பவ்வமாமபிறவிநீங்கப்பணவனைறுனமதுபானஞ்செய
யவ்வகைப்பாவந்தீரவாங்குநீராடவேண்டும். (௨௧)

என்றுநான்மறையோர்கூறியிருந்தவமுனிவரோடுஞ்
சென்றுநெல்வேலிநாதர்சிறந்தபொற்கோயில்சூழ்ந்தே
மன்றலங்கோதைகாந்துமந்திருக்கோயின்முன்னாத
துன்றியங்கொளிருமபொற்றாமரையினிற்றூயோர்வந்தார். (௨௨)

அருமறைச்சிறுவன்பொற்றாமரைப்புனலன்பாயாடிச
சுனையினையருந்துபாவந்தொலைந்தினிதிருந்துவாழ்ந்தே
பொருவிறன்மனைவியோடும்புனிதன்வாழ்கயிலைசேர்ந்தான்
கருதிநீராடித்தாயுந்தந்தையுங்கதிபெற்றாரால். (௨௩)

மற்றுளமறையோரெல்லாமகிழ்வொடும்பினிதிலூடிப்
பொற்புடனினிதின்வாழ்ந்துபொருவினற்கதியைச்சேர்ந்தா
ரற்புதமுனிவரங்கணகமகிழ்ந்தன்பாயாடித
தற்பரனெங்கோனபாதஞ்சார்ந்துந்ததியராய்வாழ்ந்தார். (௨௪)

அந்தணன்மதுவையுண்டங்காடவப்பாவந்தீர்த்த
சுந்தரமடுவின்மேன்மையாவரேசொல்லவல்லா
ரிந்தநற்கதையைக்கேட்போரெழுதுவோர்படிப்போர்தாமும்
புந்தியன்போடுநெல்லைப்புனிதன்வாழ்கயிலைசேர்வார். (௨௫)

மற்புனைவரதற்கன்பாமாதவத்தோரேயிந்த
வற்புதக்கதையையுங்கட்கறிந்தவாறுரைத்தோமிப்பாற
கற்பகத்திருநெல்வேலிக்கதையினிற்கற்றோரென்றுங்
சிந்தருகதைகளசொல்வேனென்றசூதனுஞ்சொல்வானால். (௨௬)

மத்யபானம்பண்ணின வேதியன்பாவந்தீர்த்தசருக்கமுற்றும்.

ஆகத்திருவிருத்தம்—[illegible].

---

## கருவூர்ச்சித்தர்சருக்கம்.

திருவளர்கிரணூரிறசிறந்தமாமறையோர்தம்மி
லொருமறையவனறனையனியுத்தமிகர்ப்பினமிக்காள்
கருவுறுமுதரந்தன்னிற்கருதுமேற்பரிந்தோர்வெய்யோ
னருளவந்தவதரித்தவந்தணன்கருவூர்ச்சித்தன். (௧)

வினைவிதிகடந்துமிக்கவேதசாத்திரங்கள்கற்றுத்
தனையறிந்துணர்ந்துதன்னுட்டலைவனைக்கண்டதாலே
யனகனீயங்குண்டாலிங்குமுணடனறேயார்வங்
கனியுமெய்ஞ்ஞானபோதக்காரணக்கருவூர்ச்சித்தன். (௨)

வெறிமலர்வேதனாலும்விளம்பரிதாமெய்ஞ்ஞானத்
தறிவுடைக்கருவூர்ச்சித்தனமலன்வாழ்தலங்களெல்லாஞ்
சிறிபடச்சென்றுசென்றுகேட்டநல்வரங்கள்பெற்று
நெறியொடுபணிந்துபோற்றிநெல்லைமாநகரில்வந்தான். (௩)

போர்த்துண்பொருநைச்சிந்துபூந்துறைபுனலினமூழ்கி
வாய்ந்ததங்கருமமுற்றிவளைவனத்திறைவன்கோயி
லாய்ந்தபேரறிவினோடுமகமலர்ந்தனபாயபோற்றிச்
சார்ந்துபொன்வீதிசூழ்ந்துசன்னிதிமுனபுவந்தான. (௪)

வந்துயர்கருவூர்சித்தன்வளைவனவரதனார்க்கு
சந்நிதியினியனைவேதனஞ்செயுஞ்சமையமென்றே
சிந்தையிலுணரானண்டகோடிகளுந்தேவதேவ
னெந்தையையெல்லையப்பாவென்றுமுக்காற்கூப்பிட்டான. (௫)

உரத்தொடுமழைத்தவார்த்தைக்குத்தரமொன்றுங்கேளா
னெருக்கெழவீசனிங்கேயிலையெனச்சாபமிட்டே
மருக்கமழ்சோலைசூழுமானைமாநகரைநோக்கிப்
பொருக்கெனவெழுந்துஞானபோதமாமுனிவன்போனான். (௬)

கோதிலாக்கருவூர்ச்சித்தன்கூறியவார்த்தைகேட்டு
வேதன்மாலறியாப்பாதன்வேயவனத்துறையுமெங்க
ளாதியான்விடைமீதேறியாவணிமூலநாளின
மாதவர்தேவர்சூழமானைமாநகரில்வந்தான். (௭)

வித்துமாய்வித்தினூடேவிளைபொருளாய்மேற்றோன்றுஞ்
சத்தியாய்நாதம்விந்தாய்ச்சரிக்குமைம்பூதமான
நித்தனாநதொழில்செய்விக்குநிரந்தரனெல்லைநாதன்
சித்தினோடசித்துச்சேராச்சிவானந்தமயமாய்நின்றான். (௮)

கண்டனன்கருவூர்ச்சித்தன்கண்கணீர்கலுழச்சூழ்ந்தான
றெண்டனிட்டடியில்வீழ்ந்தான்றிரும்பவுமெழுந்துநின்றே

பண்டுளவசம்போய்மேனிபரவசமடைந்தானுள்ளங்
கொண்டபேரறிவினோடுங்குளமுந்துதோத்திரங்கள்சொல்வான். (௯)

முத்தனேமுடிவிலானேமூதண்டகோடிக்கெல்லாங்
கத்தனேகருணையானேகடவுளேயெல்லாம்வல்ல
சித்தனேகங்கைநீங்காச்சிரத்தனேசிவனேதேவே
நித்தனேநிமலாபோற்றிநெல்லைநாயகனேபோற்றி. (௰)

சீலமார்ஞானபோதந்திரண்டசெஞ்சுடரேபோற்றி
வாலைதாயிமையமீன்றவடிவொருபாகாபோற்றி
ஞாலமேழ்புரந்துசெங்கோனடத்தியநம்பாபோற்றி
நீலமார்களத்தாய்போற்றிநெல்லைநாயகனேபோற்றி. (௰௧)

என்றுதோத்திரங்கள்செய்தேயிணையடிபணிந்துபோற்றி
நின்றனன்கருவூர்ச்சித்தனிமலனுந்திகளெல்லா
நன்றெனமகிழ்ச்சிகூர்ந்துநலம்பெறவுனக்குவேண்டு
மொன்றுமெய்வரங்களுண்டேற்சொல்லெனத்தூயோன்சொல்வான். (௰௨)

நிருமலாநிருத்தாநித்தாநிரந்தராநெல்லைநாதா
வருளொடுமானூர்தன்னிலாவணிமூலநாளிற்
கருதியெனமுன்னேவந்துகாட்சிதந்தனைநான்காண
வருடங்கடோறும்வந்துகாட்சிநீவழங்கவேண்டும். (௰௩)

எனனுமகிழ்ந்துநெல்லையிறையவனினிதுநோக்கி
யன்னநல்வரமுந்தந்தோமென்றனனருண்மெய்ஞ்ஞானக்
கன்னபோதமுஞ்சொலச்சித்தனகமுழவனக்கடவுளானை
பொன்னடிபலன்றுபோற்றிப்பூசனைபுரிந்தானன்றே. (௰௪)

பூசுமெய்யடியார்போற்றப்பூசைகொண்டருணெல்லை
நாதனுமப்போதும்போதினலம்பெறுகருவூர்ச்சித்த
ருதியான்மானூர்நண்ணற்கடிகளோராயிரம்பொன்னீந்தே
நீதியாற்றுணும்பின்னேநெல்லைமாநகரில்வந்தான். (௰௫)

எண்டிசையோரும்போற்றவெருக்கறவீசனிங்கே
யுண்டெனக்கருவூர்ச்சித்தனுளத்துளமகிழ்ச்சிகூர்ந்தே
வண்டணிகுழலாடன்னைவடிவுடையவள்பொற்கோயிற்
புண்டரிகப்பொன்வாவிப்புனலிடைமூழ்கிப்போந்தே. (௰௬)

சுந்தரவடிவாள்செய்யதுணையடிக்கமலம்போற்றிச்
சிந்தையனபுடனேமிக்கதிருமூலத்தானம்போற்றி
யெந்தையேவெய்முத்தைப்போற்றியிதையமன்புருகச்சூழ்ந்து
வந்தனவரதத்தானர்மலரடிவணங்கிவாழ்த்தி. (௰௭)

மற்றுமங்குள்ளதேவர்மலரடிபணிந்துபோற்றிச்
சுற்றுமாப்பிரகாரங்கள்சூழ்ந்துசன்னிதியில்வந்தே

